கணபதி துணை.

# புறப்பொருள் வெண்பாமாலை
# மூலமும் உரையும்.

## கடவுள் வாழ்த்து.

நடையூறு சொன்மடந்தை நல்குவது நம்மே
லிடையூறு நீங்குவது மெல்லாம் - *புடையூறுஞ்
சேனைமுகத் தாளிரியச் சீறுமுகத் தூறுமதத்
தானைமுகத் தானைநினைத் தால்.

(குறிப்பு.) நினைத்தால், எல்லாம் புடை ஊறுமென முடிக்க.

## சிறப்புப்பாயிரம்.

— மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலம் பழிப்பின் றுணர்ந்தோ
னோங்கிய சிறப்பி னுலகமுழு தாண்ட
வாங்குவிற் றடக்கை வானவர் மருமா
னைய னாரித னகலிடத் தவர்க்கு
மையறு புறப்பொருள் வழாலின்று விளங்க
வெண்பா மாலை யெனப்பெயர் நிறீஇப்
பண்புற மொழிந்தனன் பான்மையிற் றெரிந்தே.

என்பது பாயிரம்.

இதனுட் பாயிரமுரைத்தவெல்லாம் உரைத்துக்கொள்க.

---

* 'புடையூறு' எனவும் பாடம்.

இதன்பொருள். மன்னிய சிறப்பின் - நின்றுநிலைந்த நன்மையினையுடைய, வானோர் வேண்ட - தேவர்கள் வேண்டிக்கொள்ள, தென்மலை இருந்த - பொதியின்மலையிலிருந்த, சீர் சால் முனிவரன்றன்பால் - சிறப்புமிக்க அகத்தியமுனிவரிடத்து, தண்தமிழ் - குளிர்ந்ததமிழை, தா இன்று உணர்ந்த - வருத்தமின்றிஅறிந்த, துன் அரு சீர்த்தி - அடைதற்கரிய மிக்கபுகழினையுடைய, தொல்காப்பியன்முதல் - தொல்காப்பியரென்னும் ஆசிரியர் முதலான, பன்னிருபுலவரும் - பன்னிருவரான அறிஞரும், பாங்கு உற பகர்ந்த - பகுதியில்மிகச் சொன்ன, பன்னிருபடலம் - பன்னிருபடலமென்னும்நூலினை, பழிப்பு இன்று உணர்ந்தோன் - குற்றமில்லாமல் அறிந்தவரும், ஓங்கிய சிறப்பின் - உயர்ந்த மேம்பாட்டினையுடைய, உலகம் முழுதும் ஆண்ட - பூமிமுழுவதையும் ஆண்ட, வாங்கு வில் தட கை - வளைந்தவில்லைப் பெருத்த கையிலேயுடைய, வானவர் மருமான் - சேரமான்களுடைய வழித்தோன்றலுமாகிய, ஐயனாரிதன் - ஐயனாரிதனென்னும் பெயரினையுடையவர், பான்மையின் தெரிந்து - முறைமையாலே ஆராய்ந்து, அகல் இடத்தவர்க்கு - பரந்த நிலத்திலுள்ளவர்க்கு, மை அறு புறப்பொருள் - குற்றமற்ற புறப்பொருளை, வழால் இன்று விளங்க - வழுவுதலில்லாமல் தெளிய, வெண்பாமாலை என பெயர் நிறீஇ - வெண்பாமாலையென நாமத்தினை நிறுத்தி, பண்பு உற மொழிந்தனன் - நன்மைமிகச்சொன்னார். என்றவாறு.

ஏகாரம் - ஈற்றசை.

ஐயனாரிதன், பான்மையிற்றெரிந்துநிறீஇப் புறப்பொருளைப் பண்புறமொழிந்தனனெனக் கூட்டுக.

முனிவரன் - இருடிகளிற் சிறந்தவராகவுள்ளவர்.

(கு - பு.) 'இதனுட்பாயிரம்' என்றதிற் பாயிரமென்றது, சிறப்புப்பாயிரத்திலக்கணத்தை. உரைத்தவெல்லாம் - அதிற்கூறிய ஆக்கியோன்பெயர் முதலியவற்றை. தேவர்வேண்ட அகத்தியமுனிவர் பொதியின்மலையிற் போந்திருந்தது, பூமியைச் சமஞ்செய்தற்பொருட்டு; இக்கதையை, கந்தபுராணம், திருக்கல்யாணப் படலத்தாலுணர்க. அகத்தியர் சிறப்பின்மிக்கவரென்பது, "வழக்கெனவே செய்யுளுட் அடங்குமாயினும், தலைமைதோன்ற வேறு கூறினார்; 'முனிவர்வந்தார் அகத்தியனும்வந்தான்' என்புழிப்போல" என்னும் தொல்காப்பியப் பாயிரவிருத்தியாலு முணரற்பாலது. சீர்த்தி - மிகுபுகழ். தொல்காப்பியன் - தொல்காப்பியக்குடியென்னும் ஊரிற் பிறந்தவர்; காரணப்பெயர், இவர் திரணதூமாக்கினியென்றுங் கூறப்படுவர்; சமதக்கினிமுனிவருடைய புத்திரர். பகுதி - பகுப்பு. பழிப்பின்றுணர்தல் - ஐயம், திரிபு, அறியாமையில்லாமலறிதல். 'ஓங்கியசிறப்பு' எனபது சேரர்க்கு அடை. உலகமுழுதும் - இந்தக்கண்டத்தின் எல்லாப்பாகங்களையும்; முற்றும்மை விகாரத்தால் தொக்கது. இங்ஙனம் ஆண்டமை, 'குமரியொடு வடவிமயத், தொருமொழிவைத் துலகாண்ட' என்பது முதலியவற்றாலுணர்க. மருமான் - பரம்

# முகவுரை.



இந்நூலாசிரியர், சேரர்பரம்பரையிலுதித்த ஐயனாரிதனா ரென்பவர்; இதற்கு முதனூல், ஆசிரியர் அகத்தியனார் மாணாக்கர் பன்னிருவராலும் அருளிச்செய்யப்பட்ட பன்னிருபடலமென்பது ; இவை, "மன்னியசிறப்பின்" என்னும் இந்நூற்சிறப்புப்பாயிரத்தாலும், "மெய்யி னார்தமிழ் வெண்பா மாலையு, ஐய னாரித னாமர்ந் துரைத் தனவே" என்னும் இந்நூலின் இறுதிச் சூத்திரத்தாலும், 'பன்னிருபடல முதனூலாக வழிநூல்செய்த வெண்பாமாலை ஐயனாரிதனாரும் இதுகூறினார்' (தொல். மரபி. "வினையி னீங்கி" என்னும் சூத்திரத்தின் விசேடவுரை.) என்பதனாலும் உணரப்படும்.

இந்நூல், எழுத்துச்சொற்பொருள்யாப்பு அணியென்னும் தமிழிலக்கணமைந்தனுள், பொருளின் பகுதியாகிய அகம்புறமென்னு மிரண்டிற் புறத்தின் இலக்கணமாகிய சூத்திரங்களையும், இலக்கியமாகிய வெண்பாக்களையும், [...] வெண்பாக்களின் கருத்தைத் தனித்தனியே புலப்படுத்தி ஒவ்வொன்ற[...] முன்னும் நிற்பனவாகிய கொளுக்களையுமுடையது; பன்னிருபடலத்தின் [...] நூலென்பதற்கேற்ப வெட்சிப்படலமுதற் பெருந்திணைப்படலமிறுதியாகுள்ள பன்னிரண்டு படலவுறுப்புக்களமைந்துள்ளது. [கொளு - கருத்து.]

மேற்கூறிய பொருளின் பகுதியாகிய அகம்புறமென்னுமிரண்ட[...]

அகமாவது, ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் உள்ளத்து[...] வாலேயே இன்பம் அநுபவிக்கும் ஒழுக்கம். இன்பம்பற்றி [...] தேநிகழும் ஒழுக்கத்தை அகமென்றது ஆகுபெயர். [அகம் - உள்.]

புறமாவது, மேற்கூறிய ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லா[...]லும் அநுபவித்து உணரப்பட்டு இஃது இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குங் கூ[...]ப்படுவதாய் அறனும்பொருளுமென்னும் இயல்பினையுடையதாய்ப் புறத்தேநிகழுமொழுக்கம் ; அறனும்பொருளும்பற்றிப் புறத்தேநிகழும் ஒழுக்கத்தைப் புறமென்றது ஆகுபெயர். [புறம் - வெளி]

புறத்தே அறனும்பொருளும்பற்றி நிகழும் ஒழுக்கமாகிய பொருளைப் புலப்படுத்தும் வெண்பாக்களின் வரிசையையுடையதாகலின், இந்நூல் **புறப்பொருள் வெண்பாமாலை**யென்று பெயர்பெற்றது ; [மாலை - வரிசை. இது வெண்பாமாலையெனவும் வழங்கப்படும். இதிலுள்ள வெண்பாக்களுட் பல, **பரிமேலழகர்**முதலிய பலருரைகளிலும் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்டும் உரைநடையாக எழுதப்பட்டுமுள்ளன.

இதனால், பண்டைக்காலத்திருந்தஅரசர் பகைவருடைய பசுக்களை[...] கவாதல்முதலிய யுத்தமுறையும், பிறவும் நன்குபுலப்படும். இதிற் கூறப்[...]

ட்ட யுத்தமுறை முதலியவற்றிற்கும் தொல்காப்பியப் புறத்திணையியலிற் கூறப்பட்டுள்ளவற்றிற்கும் ஆங்காங்குச் சிற்சில வேறுபாடுகள் காணப்படும். அங்ஙனங் காணப்படினும் 'சொன்முடிபும் பொருண்முடிபும் வேறுபடாமையின், மரபுநிலைதிரியாதன' என்று பெரியோர் கூறுவர்.

இந்நூலுறுப்புக்களாகிய பன்னிரண்டுபடலத்தும் முறையே அமைந்த வெட்சிமுதலியதிணைகளுள்,

க. வெட்சித்திணையாவது :—பகைவருடைய பசுக்களைக் கவர்தல்; இதற்கு வெட்சிப்பூ அல்லது வெட்சிமாலைசூடுதல் உரித்து; இது வெட்சியரவமுதலிய பத்தொன்பது துறைகளையுடையது. இதனை அகத்திணைகளுள் ஒன்றாகிய குறிஞ்சியின்புறனென்பர் தொல்காப்பியர். திணை - ஒழுக்கம்; துறை - மக்களும் விலங்குகள் முதலியனவும்சென்று நீருண்ணுந்துறைபோலப் பலவகைப்பட்டபொருளும் ஒருவகைப்பட்டு இயங்குதற்கு உரியவழி.

உ. கரந்தைத்திணையாவது :—பகைவர்கவர்ந்த பசுக்களை மீட்டல்; இதற்குக் கரந்தைப்பூ அல்லது கரந்தைமாலைசூடுதல் உரித்து; இது கரந்தையரவமுதலிய பதின்மூன்று துறைகளையுடையது; இது வெட்சித்திணைக்கு மறுதலைத்திணை; கரந்தையென்று ஒருதிணைகொள்ளாது நிரைமீட்டலை வெட்சித்திணையுள் அடக்குவர் தொல்காப்பியர்.

ங. வஞ்சித்திணையாவது:—பகைவருடைய நாட்டைக்கொள்ள நினைந்து போர்செய்தற்கு அவர்மேற்சேறல்; இதற்கு வஞ்சிப்பூ அல்லது வஞ்சிமாலைசூடுதல் உரித்து. இது வஞ்சியரவமுதலிய இருபது துறைகளையுடையது; இதனை முல்லைத்திணையின்புறனென்பர் தொல்காப்பியர்.

ச. காஞ்சித்திணையாவது:—அங்ஙனம்போர்செய்தற்குவந்த பகைவரை எதிர்சென்று ஊன்றுதல்; இதற்குக் காஞ்சிப்பூ அல்லது காஞ்சிமாலைசூடுதல் உரித்து; இது காஞ்சியெதிர்வுமுதலிய இருபத்தொருதுறைகளையுடையது; இது வஞ்சித்திணைக்கு மறுதலைத்திணை. இதனை, "வஞ்சியுங் காஞ்சியுந் தம்முண் மாறே" என்னும் பன்னிருபடலச்சூத்திரத்தாலுணர்க. இத்திணை, வீடுபேறுநிமித்தமாகப் பல்வேறுநிலையாமையைச் சான்றோர்சாற்றுங்குறிப்பினதென்றும், பெருந்திணையின்புறனென்றும் கூறுவர் தொல்காப்பியர்.

ரு. நொச்சித்திணையாவது:— தம்மதிலைக்காத்தல்; இதற்கு நொச்சிப்பூ அல்லது நொச்சிமாலைசூடுதல் உரித்து; இது மறனுடைப்பாசிமுதலிய எட்டுத்துறைகளையுடையது; நொச்சியென ஒருதிணைகொள்ளாது மதில் காத்தலை உழிஞைத்திணையுளடக்குவர் தொல்காப்பியர்.

சு. உழிஞைத்திணையாவது :—பகைவருடையமதிலை வளைத்துக்கொள்ளுதல்; இதற்கு உழிஞைப்பூ அல்லது உழிஞைமாலைசூடுதல் உரித்து; இது குடைநாட்கோள் முதலிய இருபத்தெட்டுத் துறைகளையுடையது. இதுவும் நொச்சித்திணையும் ஒன்றற்கொன்று மறுதலைத்திணை. இதனை மருதத் திணையின் புறனென்பர் தொல்காப்பியர்.

எ. தும்பைத்திணையாவது:—பகைவரோடு போர்செய்தல்; இதற்குத் தும்பைப்பூ அல்லது தும்பைமாலைசூடுதல் உரித்து; இது தும்பையரவமுதலிய இருபத்துமூன்று துறைகளையுடையது. இதனை நெய்தற்றிணையின் புறனென்பர் தொல்காப்பியர்.

அ. வாகைத்திணையாவது :—பகைவரைவெல்லுதல்; இதற்கு வாகைப்பூ அல்லது வாகைமாலை சூடுதல் உரித்து; இது வாகையரவமுதலிய முப்பத்திரண்டு துறைகளையுடையது. அந்தணர்முதலிய நான்கு வருணத்தோரும் அறிவரும் தாபதர்முதலியோரும் தம்முடைய கூறுபாடுகளை மிகுத்தல் வாகைத்திணையென்றும், அது பாலைத்திணையின் புறனென்றும் கூறுவர் தொல்காப்பியர்.

க. பாடாண்டிணையாவது :—ஒருவனுடைய கீர்த்தி வலி கொடை தண்ணளிமுதலியவற்றை ஆராய்ந்துசொல்லுதல்; இது வாயினிலைமுதலிய நாற்பத்தேழு துறைகளையுடையது; இதனைக் கைக்கிளைத்திணையின்புறனென்பர் தொல்காப்பியர்; பாடாணென்பது, பாடுதல் வினையையும் பாடப்படும் ஆண்மகனையும் நோக்காது அவனது ஒழுகலாறாகியதிணையை யுணர்த்தினமையின், வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையென்பர் நச்சினார்க்கினியர்.

கO. பொதுவியலாவது.—மேற்கூறிய புறத்திணைகட்கெல்லாம் பொதுவாயுள்ளனவும் அவற்றிற்கூறுதொழிந்தனவுமாகிய இலக்கணங்களைக் கூறுவது.

கக. கைக்கிளைத்திணையாவது:—ஒருமருங்குபற்றிய கேண்மை; இஃது, ஆண்பாற்கூற்று, பெண்பாற்கூற்று என இருவகைப்பட்டு ஒவ்வொன்றும் காட்சிமுதலிய துறைகளைப் பெற்றுவருவது. பிரமமுதலிய எண்வகை மணத்துள்ளே ஆசுரம் இராக்கதம் பைசாசம் என்னும் இம்மூன்றும் இதன் பயனவென்பர் தொல்காப்பியர்.

கஉ. பெருந்திணையாவது :—பொருந்தாக்காமம்; இது வேட்கைமுந்துறுதல்முதலிய பல துறைகளையுடையது. கைக்கிளைமுதலிய அறுவகைப்பைசாசங்களும் பிரமமுதலிய எண்வகைமணத்திலுள்ளே ஆசுரம இராக்கதம் பிரமம் சம் காந்தருவமென்னும் நான்குமணங்களைப்பெறத் தான் ஒன்றுற்று நடத்த பிராசாபத்தியம் ஆரிடம் தெய்வமென்னும் நான்கு மணம் காரணங்கூறுலான் எல்லாவற்றிலும் பெரிதாகிய திணையென்று பெயர் கூறுவர் நச்சினார்க்கினியர்.

மேற்கூறிய பன்னிரண்டுதிணைகளுள் வெட்சி வஞ்சி உழிஞை தும்பையீறாகவுள்ள எழும் புறமென்றும், வாகை பாடாண் பொதுவியலென்னுமூன்றும் புறப்புறமென்றும், கைக்கிளை பெருந்திணையென்னுமிரண்டும் அகப்புறமென்றுங் கூறப்படும்.

இதற்கு முதனூலாகிய பன்னிருபடலச் சூத்திரங்களுட்சில பழையவுரைகளில் ஆங்காங்குக் காணப்படுகின்றனவேயன்றி, அந்நூல் முழுவதும் இக்காலத்து அகப்படாமையால் இதிலுள்ள சில திணைகளின் இலக்கணமும் துறைப்பெயர்கள் பலவற்றின் பொருட்காரணமும் நன்குபுலப்படவில்லை. இந்நூலுரையாலும் அவை விளங்கவில்லை; ஆயினும் தொல்காப்பியப் புறத்திணையியற்கு நச்சினார்க்கினியரிபற்றிய உரையால், அவற்றுட் பெரும்பாலன விளங்குகின்றன.

பண்டைக்காலத்தில் இத்தமிழ்நாட்டில் நடைபெற்றுவந்த யுத்தமுறைகள் முதலியவற்றை இக்காலத்தார் எளிதில் அறிந்துகொள்ளுதற்குச் சிறந்த கருவிகளாகவுள்ளவற்றில் இந்நூலும் ஒன்று. இந்நூலாசிரியர் அரசபரம்பரையினராதலின், யுத்தமுறைகளை நன்றாக அறிந்து கூறினாரென்று இதனை ஊன்றிப் படிப்பவர்களுக்குத் தோற்றும்.

இப்போது கிடைத்த கையெழுத்துப் பிரதிகள் சிலவற்றிற் பாடபேதங்களும் உரை வேறுபாடுகளும் சிற்சில காணப்பட்டன; அவற்றை உபயோகித்தும் மாணாக்கர்களுக்குக் கருத்து நன்குபுலப்படும்படி சொற்களுக்கும் செய்யுட்களுக்கும் பழையவுரையைத் தழுவியே அந்வயித்துப் பதவுரையெழுதியும் அவ்வுரையில் திரிசொற்களிருந்தவிடத்தில் இயற்சொற்களையமைத்தும் முக்கியமான இடங்களில் விஷயங்களை விளக்கியும் இப்புத்தகம் பதிப்பிக்கப் பெற்றது.

வெட்சிப்படல முதலிய நான்கு படலத்துள், 21, 73-ம் வெண்பாக்களிலும் 78-ம் பாட்டின் கொளுவிலும் அவையல் கிளவிகள் வந்திருத்தலின், படிக்கும் மாணாக்கர்கள் அவற்றை நீக்கிப் படித்துக்கொள்க.

இப்பதிப்பிற் காணப்படும் குறைகளைப் பொறுக்கும்வண்ணம் பண்டிதரமணிகளை நிரம்பக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்:

வே. சாமிநாதையன்.



பனாயிற் பிறந்தவர்; "மருமானே மரும கன்பேர் வழித்தோன்றல் பேரு மாமே" என்பது சூடாமணி நிகண்டு. ஹரிஹரபுத்திரருடைய திருநாமமாகிய ஐயனாரிதனாரென்பது, இந்நூலாசிரியர்க்கு இயற்பெயராக இடப்பட்டதுபோ லும்; மாயூரத்தின் கிழக்கிலுள்ள திருவிடைக்கழியென்னும் ஸ்தலத்தைச்சார்ந்த ஊராகிய குராஞ்சேரியிலுள்ள மஹாசர்ஸ்தாவிற்குப் பெயராக இப்பெயர் இன்றும் வழங்கப்படுகின்றது. வழால் - வழுவுதல்; 'சுற்றந்தழால்'என்பதில் 'தழால்' போலக்கொள்க. இச்சூத்திரத்தில், 'ஐயனாரிதன்.........பண்புற மொழிந்தனன்' என்றதனால், இந்நூலை ஆக்கியவர் ஐயனாரிதனாரென்பதும், 'பன்னிருபடலம் பழிப்பின்றுணர்ந்தோன்' என்றதனால் இதற்கு முதனூல் பன்னிருபடலமென்பதும், அதற்கு இது வழிநூலென்பதும், 'வெண்பாமாலையெனப்பெயர் நிறீஇ' என்றதனால் இதன்பெயர் வெண்பாமாலையென்பதும், 'புறப்பொருள் வழாலின்று விளங்க' என்றதனால் இதுநுதலியபொருள் புறப்பொருளிலக்கணமென்பதும், இந்நூலைக்கற்றலாற் போதரும்பயன் புறப்பொருளிலக்கணத்தைக் குற்றமின்றி விளங்கவுணர்தல் என்பதும், இந்நூலைச் செய்தற்குக்காரணம் புறப்பொருளிலக்கணத்தை இனிது விளக்குதலென்பதும் பெறப்பட்டன.

---

## முதலாவது
# வெட்சிப்படலம்

வெட்சி, வெட்சி யரவம் விரிச்சி செலவு
வேயே புறத்திறை யூர்க்கொலை யாகோள்
பூசன் மாற்றே புகழ்சுரத் துய்த்த
றலைத்தோற் றம்மே தந்துநிறை பாதீ
டுண்டாட் டியர்கொடை புலனறி சிறப்பே
பிள்ளை வழக்கே பெருந்துடி நிலையே
கொற்றவை நிலையே வெறியாட் டுளப்பட
வெட்டிரண் டேனை நான்கொடு தொகைஇ
வெட்சியும் வெட்சித் துறையு மாகும்.

என்பதுசூத்திரம் என்னுதலிற்றோவெனின், வெட்சித்திணையும் அதன் துறைகளுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள். வெட்சி, வெட்சியரவம், விரிச்சி, செலவு, வேய், புறத்திறை, ஊர்க்கொலை, ஆகோள், பூசன்மாற்று, சுரத்துய்த்தல், தலைத்தோற்றம், தந்துநிறை, பாதீடு, உண்டாட்டு, கொடை, புலனறிசிறப்பு, பிள்ளைவழக்கு, துடிநிலை, கொற்றவைநிலை, வெறியாட்டு என இவை இருபதும் வெட்சித்திணையும் அதன் துறைகளுமாம். எ - று.

(குறிப்பு.) என்றுதலிற்றே - யாதுகருதியதோ. ஈண்டுக்கூறியதுறைப் பெயர்களின் பொருள்களையும் உதாரணங்களையும் பின்னர்முறையே காண்க.

வெட்சியென்பது, இருவகைத்து ;-மன்னுறுதொழிலும் தன்னுறுதொழிலுமென.

(கு - பு.) வெட்சியென்பது - வெட்சித்திணையாவது. மன்னுறுதொழில் - அரசன் கட்டளையாற்சென்று ஒருவீரன் பகைவருடைய நிரையைக்கவரும் தொழில். தன்னுறுதொழில் - ஒருவீரன் அரசன் கட்டளையின்றித் தானே சென்று நிரையைக்கவரும்தொழில். என இருவகைத்தென்க. வெட்சித்திணை யாவது பகைவருடைய நிரையைக்கொள்ளும் ஒழுக்கம் ; இதற்கு வெட்சிப் பூச்சூடுதலும் உரித்து. வெட்சித்திணை நிகழ்தற்குக் காரணம், அடியிற் குறித்த வற்றாலுணரப்படும் : 'இருபெருவேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர் நாட்டுவாழும் அந்தணரும் ஆவும் முதலியன தீங்குசெய்யத்தகாத சாதிகளை ஆண்டுநின்றும் அகற்றல்வேண்டிப் போதருகவெனப் புகறலும் அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினால் தாமே கொண்டு வந்து பாதுகாத்தலும் தீதெனப்படாது அறமேயாமென்றற்கு "ஆதந்தோம்பல்" என்றான் ; அஃது, "ஆவு மானியற் பார்ப்பன மாக்களும், பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித், தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும், பொன் போற் புதல்வற்பெறாஅ தீரு, மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென, வறத்தாறு நுவலும் பூட்கை" (புறநானூறு, க.) எனச் சான்றோர்கூறியவாற் றானுணர்க' என்பது, தொல். புறத். உ - ம் சூ. நச்சினார்க்கினியம்.

வென்றி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியுஞ்
சென்றி கன்முனை யாதந் தன்று.

இ - ள். வென்றி வேந்தன் - வெற்றியையுடைய அரசன், பணிப்பவும் பணிப்பு இன்றியும் சென்று - ஏவவும் ஏவுதல் இன்றியும் போய், இகல் முனை ஆ - மாறுபாட்டினையுடைய பகைவரிடத்துள்ள பசுநிரையை, தந்தன்று - (ஒருவீரன்) கைக்கொண்டது. எ - று.

(கு - பு.) முனை - போர் ; ஆகுபெயர். தந்தன்று - இறந்தகால உடன் பாட்டுத் தெரிநிலை வினைமுற்று; பின் வருவனவும் இத்தன்மையனவே.

1. அவற்றுள், மன்னுறுதொழில் வருமாறு :—

இ - ள். அவற்றுள் - முன்புசொன்ன இரண்டனுள்ளும், மன்னுறுதொழில் வரும் ஆறு - அரசன்கட்டளையாற் செய்யும்தொழில் வருமுறைமை. எ - று.

(கு - பு.) முன்புசொன்ன இரண்டு - மன்னுறுதொழில், தன்னுறுதொழிலென்பன.

மண்டிமெரியுண் மரந்தடிந் திட்டற்றாக்
கொண்ட கொடுஞ்சிலையன் கோறெரியக் - கண்டே
யடையார் முனையலற வைவிலைவேற் காளை
விடையாயங் கொள்கென்றான் வேந்து.

இ - ள். மண்டும் எரியுள் - மிகக் கொளுந்தியெரியாநின்ற நெருப்பினுள்ளே, மரம் தடிந்து இட்டற்று - மரத்தை வெட்டியிட்டதன்மைத்தாக, கொண்ட கொடு சிலையன் - கையிலே வாங்கிக்கொள்ளப்பட்ட கொடிய வில்லையுடைய வீரன், கோல் தெரிய கண்டு - அம்பை ஆராயக்கண்டும், வேந்து - அரசனானவன், ஐ இலை வேல் காளை - வியக்கத்தக்க இலைத்தொழிலாற் சிறந்த வேற்படையையுடைய காளாய், அடையார் முனை அலற - பகைவருடைய போர்கலங்கும்படி, விடை ஆயம் கொள்க என்றான் - ஏற்றையுடைய நிரையைக்கொள்கவென்று சொன்னான். எ - று.

யாரைக்கண்டு? கொடுஞ்சிலையானைக்கண்டு; கண்டுமெனா உம்மைவிரித்துரைக்க. ஏகாரம் - ஈற்றசை. கொண்ட - கொள்ளப்பட்டன; யாவை? நிரை எனமுற்றாக்கிச் சூத்திரத்திற்கேற்பப் பொருளுரைப்பாருமுளர்.

(கு - பு.) அரசன் அம்பை ஆராயும்வீரனைநோக்கி நிரைகொள்கவென்றதற்கு மண்டியெரியும் தீயில் மரத்தைத் தடிந்திட்டது உவமம். காளை - சேனைத்தலைவன். வேந்தனானவன் காளையைநோக்கி விடையாயங் கொள்கவென்றானென்றதனால், இச்செய்யுள், மன்னுறுதொழிலென்னும் துறைக்கு உதாரணமாயிற்று. (௧)

2. இனி, தன்னுறுதொழில் வருமாறு.

இ - ள். இனித் தன்னுறுதொழில் வரும்முறைமை. எ - று.

கு - பு. தன்னுறுதொழிலாவது - அரசன்கட்டளையின்றி ஒருவீரன் நிரைகவர்தற்குத் தானேசெல்லல்.

அறாஅ நிலைச்சாடி யாடுறு தேறன்
மறாஅன் மழைத்தடங் கண்ணி - பொறாஅன்
கடுங்கண் மறவன் கழல்புனைந்தான் காலை
நெடுங்கடைய நேரார் நிரை.

இ - ள். மழை தட கண்ணி - குளிர்ச்சியையுடைய பெரிய கண்ணினையுடையாய், கடுங்கண் மறவன் - தறுகண்மையையுடையவீரன், கழல் புனைந்தான் - (காலிலே) வீரக்கழலைக் கட்டினான்; காலை - காலையிலே, நேரார் நிரை - பகைவருடைய பசுக்கூட்டங்கள், நெடு கடைய - (நினது) நெடிய வாயிலிடத்தனவாம்; (ஆதலால்,) அறாஅ நிலைச்சாடி - தேனறாத நிலைத்தாழியில், ஆடு உறு தேறல் - காய்ச்சுதலுற்ற மதுத்தெளிவை, மறாஅல் - மறாதே வார்ப்பாயாக; பொறாஅன் - (கடன்) பொறான். எ - று.

நிரை காலையிலே நின்கடையவாம்; ஆதலால், தேறலை மருதே வார்ப்பாயாகவென்க.

நெடியகடையிலேவந்துநின்றனன், நேரார் நிரையென்று இறந்தகாலப்பொருளாக்கி, கடுங்கண்மறவன் கழல்புனைந் தவனெனப் பெயராக்கிப் பின்புவார்ப்பேனெனப் பொருனென்றது மொன்று.

கு - பு. இஃது, ஒருவீரன் நிரைகொள்ளச் செல்கின்றமை கண்டார் கள்விலையாட்டிக்குக்கூறியது. நிலைத்தாழி - பாண்டவிசேடம். ஆடு - முதனிலைவிகாரப்பட்ட தொழிற்பெயர்; அடுதலென்றுபொருள்; "ஆடு நனிமறந்த கோடுயரடுப்பு" (புறநானூறு, கசுச) என்பதனாலுமுணர்க. தேறல் - கள்ளின்தெளிவு; என்றது, வீரபானத்தை. மருஅல் - எதிர்மறைவியங்கோள்; பகைவருடைய பசுக்கூட்டங்களை உனக்குக் கள்விலையாகக் கொடுப்பானென்றபடி; இதனை, புறநானூறு, உடுஅ: "பெருநிரை, யூர்ப்புறநிறையத் தருகுவன் யார்க்குந், தொடுதலோம்புமதி முதுகட் சாடி" என்பதனாலுமுணர்க. இச்செய்யுளின்கருத்து, "கள்விலை யாட்டி மறுப்பப் பொருமறவன் கைவில் லேந்திப், புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப் போகும் போலும்" என்னும் **சிலப்பதிகாரம்**, வேட்டுவவரிச் செய்யுளில் ஒருவாறு அமைந்திருத்தல் காண்க. 'கடுங்கண் மறவன் கழல்புனைந்தான்' என்றதனால், இது, தன்னுறுதொழிலாயிற்று. (உ)

## வெட்சியரவம்:—

3. கலவார் முனைமேற்
செலவமர்ந் தன்று.

இ - ள். கலவார் முனைமேல் - பகைவருடைய முனையிடத்து, செலவு அமர்ந்தன்று - போதலை விரும்பியது. எ - று.

(கு - பு.) வெட்சி அரவம் - வெட்சிப்பூவைப்புனைந்து நிரைகவர்தற்குச் செல்லும் முழக்கம். முனை - போர்ப்புலம். அமர்தல் - விரும்புதல்.

வ - று. நெடிபடு கானத்து நீள்வேன் மறவ
ரடிபடுத் தாரதர் செல்வான் - றுடிபடுத்து
வெட்சி மலைய விரவார் மணிநிரைக்
கட்சியுட் காரி யெழும்.

இ - ள். நெடி படு கானத்து - சிள்வீடுகள் ஒலிக்கும் காட்டிடத்து, நீள் வேல் மறவர் - நீண்ட வேலையுடைய வீரர், அடி படுத்து - (காலிலே) செருப்பைத்தொட்டு, அருமை அதர் செல்வான் - கடத்தற்கரியவழியிடத்துச் செல்லவேண்டி, துடி படுத்து - உடுக்கையைக் கொட்டப்பண்ணி, வெட்சி மலைய - வெட்சிப்பூவைச்சூட, விரவார் மணி நிரை கட்சியுள் - பகைவருடைய, மணியாற்சிறந்த பசுவினையுடைத்தான காட்டிடத்து, காரி எழும் - காரியென்னும் பறவை (துர்நிமித்தமாக) எழாநிற்கும். எ - று.

(கு - பு) சிள்வீடு - ஒருவகைவண்டு. மணி - பசுக்கழுத்திற்பூட்டப்படு மணி. காரி - கரிக்குருவி. இச்செய்யுளில், மறவர் பகைவருடைய நிரையைக் கவர்தற்கு வெட்சிப்பூப்புனைந்து வாத்தியமுழக்கத்தோடு செல்லுகையில், பகைவர்க்குத் துர்நிமித்தமாகக் கரிக்குருவி எழுமென்றதை, (பழையசெய்யுள்:) "வெவ்வாய் மறவர் மிலைச்சிய வெட்சியாற், செவ்வானஞ் செல்வது போற் செல்கின்ற - ரெவ்வாயும், ஆர்க்குங் கழலொலி யாங்கட் படாலிய ரோ, போர்க்குந் துடியொடு புக்கு." (தொல். புறத். ந. சூ. ந) எனவும், சிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், ௧௦. "வண்டு மூசறு நறவ மார்ந்தவர், தொண்ட கப்பறை துடியொ டார்த்தெழ, விண்டு தெய்வதம் வணங்கி வெல்கென, மண்டி ஞர்நிரை மணந்த காலையே", ௧௨: "பிள்ளை யுள்புகுந் தழித்த தாதலா, லெள்ளன் மின்னிரை யின்று நீரென", கனகமாலையாரிலம்பகம், ௨௬௬: "விடையுடை யினநிரை விழுங்கன் மேயினர், துடியொடு சிறுபறை துவைத்த வால்வளை, முடியுல குறநிமிர்ந் தார்த்த மொய்கழ, லடுபடை யிளையரு மரணம் வீசினர்" எனவும், சிலப்பதிகாரம், வேட்டுவவரி: "உட்குடைச் சீறூ ரொருமகன ணிரைகொள்ள வுற்ற காலை, வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டும் போலும், வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டின் வேற்றூர்க், கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டும் போலும" எனவும், வில்லி. பாரதம், நிரைமீட்சிச்சருக்கம், அ: "தக்கோர் தகுஞ்சொற்கள் கேளாத துரியோத னன்சொல்லினன், மிக்கோர் மிலைச்சுஞ் செழுந்தாம விறல்வெட்சி மிலைதேவினன், திக்கோதை யெழுவிம்ம முரசங்க ளரசான திரிகத்தர்கோன், அக்ரோணி படையோடு போயா னிடித்தா னவன்சார்பிலே" எனவும் வரும்பாடல்களால் விளங்க வுணர்க. 'வெட்சிமலைய', 'துடிபடுத்து' என்றமையின், இந்த வெண்பா, வெட்சியரவத்திற்கு உதாரணமாயிற்று. (௩)

விரிச்சி:—

4. வேண்டிய பொருளின் விளைவுநன் கறிதற்
கீண்டிருண் மாலைச் சொல்லோர்ந் தன்று.

இ - ள். வேண்டிய பொருளின் - விரும்பிய காரியத்தினது, விளைவு நன்கு அறிதற்கு - ஆக்கத்தின் அழகை அறிதற்கு, ஈண்டு இருள் மாலை - செறிந்த இருளையுடைய மாலையிடத்து, சொல் ஓர்த்தன்று - நற்சொல்லைக் கேட்டது. எ - று.

(கு - பு.) விரிச்சி - நன்னிமித்தம்; நற்சொற்கேட்டலுமாம்; இது சினேந்திரமாலையிலுள்ள, மாநிமித்த காண்டத்தாலும் விளங்க உணரப்படும். வேண்டியபொருள் - பகைவருடைய நிரையைக்கவர்தல்.

வ - று. எழுவணி சீறா ரிருண்மாலை முன்றிற்
குழுவினங் கைகூப்பி நிற்ப - தொழுவிற்

குடக்கணீ கொண்டுவா வென்றாள் குனிவிற்
றடக்கையாய் வென்றி தரும்.

இ - ள். எழு அணி சீறூர் - கணையம் சூழ்ந்த சிற்றூரில், இருள் மாலை - இருளையுடைய மாலைக்காலத்தில், முன்றில் - முற்றத்திலே, குழு இனம் - திரண்ட (நம்முடைய) கூட்டம், கைகூப்பி நிற்ப - கைகுவித்துநிற்க, தொழுவில் - (கட்சாடியிருக்கும்) ஏணியிலுள்ள, குடக்கள் நீ கொண்டுவா என்றாள் - குடத்துக்கள்ளை நீ எடுத்துக்கொண்டுவாவென்று சொன்னாள்; ஆதலால், குனி வில் தட கையாய் - வளைந்தவில்லைப் பெரிய கையிலேயுடையவனே, வென்றி தரும் - (அச்சொல்) நமக்கு வெற்றியைத் தரும். எ - று.

'தொழுவிற், குடக்கணு கொண்டுவா வென்றாள்' என்று பாடமோதி, மேல்பாற்றொழுவத்திற் பசுவை அடித்துக்கொண்டுவாவென்றாளென்று பொருளுரைப்பாருமுளர்.

(கு - பு.) கணையம் - யானைகளைத் தடுக்குமரம். கட்சாடிவைத்தற்குரிய மரக்கோவையை ஏணியென்றல் அக்கால வழக்கு; இதனை, "நிரம்பகல் பறியா வேறுவேணி, நிறைந்து நெடிதிராத் தசும்பின்" (பதிற்றுப் பத்து, சஅ) என்பதனாலும் 'ஏறுவேணியென்பது கோக்காலி' என்னும் அதன் உரையாலும் உணர்க. அச்சொல் - குடத்துக்கள்ளைக் கொண்டுவா வென்றசொல். 'குடக்கணு' என்பதை, குடக்கு கண் ஆ எனப்பிரித்துப் பொருள்கொள்க; குடக்கு - மேற்கு. இது, நற்சொற்கேட்டோர் சேனைத் தலைவனைநோக்கிக் கூறியது. பெரும்பொருள்விளக்கம்: "திங்கவுள் வெள் வாய்த் திரிந்துவீழ் தாடி, நரைமுதியோ னின்றுரைத்த நற்சொல் - நிரையன்றி, எல்லைநீர் வைய மிறையோற் களிக்குமால், வல்லைநீர் சென்மின் வழி" என்பதும் இச்செய்யுளும் பொருளால் ஒத்து விளங்குதல்காண்க. அரசனேவலாற் போந்தோர்க்கு விரிச்சியோர்த்தல் இயலுவதன்றேனும் இன்னநாளில் வினைவாய்க்குமென்று அறிதற்பொருட்டாதலின், இயலுமென்பர் இலக்கண விளக்க வுரையாசிரியர்; (புறத். ௫ - ம் சூ. உரை). புறநானூறு, உ௮0: "நென்னீ ரெறிந்து விரிச்சியோர்க்குஞ், செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா" எனவும், முல்லைப்பாட்டு, ௧௦ - கக: "அரும்பவி றுலரி தூஉய்க்கை தொழுது, பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப" எனவும், ஷை விசேடவுரை: 'ஒருவேந்தன் ஒரு வேந்தனோடு இகல்கருதினாற் போர்செய்யவேண்டுதலின், அவனாட்டு அந்தணர்முதலியோரைத் தன்னாட்டின்கண்ணே அழைத்தற்கும் அதனை அறியாத ஆவைக்கொண்டுபோந்து தான் காத்தற்குமாகத் தன்படைத் தலைவரைநோக்கி அரசன் நிரையடித்தற்குஏவியவழி, அவர் அவனூரினின்றும்போய் ஒரு பாக்கத்துவிட்டிருந்து அரசனுக்கு மேல்வரும் ஆக்கத்தை அறிதற்கு விரிச்சிப்போக்கல்வேண்டுமென்று புறத்திணையியலுட் கூறினமையான், ஈண்டும் அவ்வாறேகூறினும்' எனவும்வந்துள்ளவற்றால், நற்சொற்கேட்டலாகிய பண்டை வழக்கத்தை உணர்ந்துகொள்க. 'கைகூப்பி

நிற்பக் குடக்கணி கொண்டுவா வென்றாள்' என்றுவந்தமையின், இச்செய்யுள், விரிச்சிக்கு உதாரணமாயிற்று. (ச)

## செலவு:—

5. வில்லே ருழவர் வேற்றுப்புல முன்னிக்
கல்லேர் கானங் கடந்துசென் றன்று.

இ - ள். வில் ஏர் உழவர் - வில்லாகிய ஏரினையுடைய உழவர், வேறு புலம் முன்னி - பகைவரிடத்தைக்கருதி, கல் ஏர் கானம் - கற்கள் எழுகின்ற காட்டை, கடந்து சென்றன்று - நீங்கிச்சென்றது. எ - று.

(கு - பு.) செலவு - செல்லுதல். "வில்லே ருழவர் பகைகொளினும்" என்பது, திருக்குறள், அஎஉ.

வ - று, கூற்றினத் தன்னார் கொடுவி லிடனேந்திப்
பாற்றினம் பின்படர முன்படர்ந் - தேற்றினம்
நின்ற நிலைகருதி யேகினார் நீள்கழைய
குன்றங் கொடுவில் லவர்.

இ - ள். கூற்று இனத்து அன்னார் - கூற்றின்கூட்டத்தை ஒத்தவீரர், கொடு வில் இடன் ஏந்தி - வளைந்த வில்லை இடப்பக்கத்திற்கொண்டு, பாறு இனம் பின் படர - கழுகும் பருந்துமாகிய கூட்டம் பின்னேதொடர்ந்துவர, முன்பு அடர்ந்து - (தமது) வலியானே நெருங்கி, கொடு வில்லவர் - வளைந்த வில்லாளர்களுடைய, ஏறு இனம் நின்ற நிலை - ஏறுகள்பொருந்திய பசுநிரைகள்நின்ற நிலையையுடைய, நீள் கழைய குன்றம் - உயர்ந்தமூங்கிலையுடைய தான மலையை, கருதி ஏகினார் - நினைந்துபோனார். எ - று.

கூற்றினத்தன்னார் ஏகினாரெனக்கூட்டுக.

(கு - பு.) கூற்றினம் - இல்பொருளுவமம். முன்பு - வலி. ஏறுகள் - விடைகள். 'ஏற்றினம்நின்ற நிலைகருதி ஏகினார்' என்று வந்தமையின், இச்செய்யுள், செலவிற்கு உதாரணமாயிற்று. (ரு)

## வேய்:—

6. பற்றார் தம்முனைப் படுமணி யாயத்
தொற்றா ராய்ந்த வகையுரைத் தன்று.

இ - ள். பற்றார்தம் முனை - பகைவருடைய முனையிடத்துள்ள, படு மணி ஆயத்து - ஒலிக்கும் மணியையுடைய பசுகூட்டத்திற்சென்று, ஒற்று ஆராய்ந்த - ஒற்றர்கள் தெரிந்த, வகை உரைத்தன்று - கூறுபாட்டினைச் சொல்லியது. எ - று.

(கு - பு.) வேய் - ஒற்று; குறளைச்சொலென்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர். ஒற்று - ஆகுபெயர்.

வ - று. நிலையு நிரையு நிரைப்புறத்து நின்ற
சிலையுஞ் செருமுனையுள் வைகி - யிலைபுனைந்த
கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோய் சென்றறிந்து
நள்ளிருட்கண் வந்தார் நமர்.

இ - ள். இலை புனைந்த - பச்சிலையுடனே விரவித்தொடுத்த, கள் அவிழ் கண்ணி - தேன்பொழியும் மாலையினையும், கழல் வெய்யோய் - வீரக்கழலினையுமுடைய (போரை) விரும்பியோய், நமர் செருமுனையுள் சென்று - நம் சுற்றத்தார் வேற்றுப்புலத்திலேபோய், வைகி - அதிற்றங்கி, நிலையும் - பசு நின்ற இடத்தையும், நிரையும் - பசுவினுடைய அளவையும், நிரைபுறத்து நின்ற சிலையும் - பசுவினுடைய புறத்தே காத்துநின்ற வில்லையுடைய சேனையின் அளவையும், அறிந்து - ஆராய்ந்து, நள் இருட்கண் வந்தார் - நடுவிருளிடத்து வந்தார். எ - று.

(கு - பு.) நள்ளிருட்கண் சென்றெனு இயைப்பினுமாம். வெம்மை - விருப்பம். நிரை, சிலை - ஆகுபெயர். நமர் செருமுனையுள் வைகி, நிலை முதலியவற்றை அறிந்துவந்தாரென்றமையின், இச்செய்யுள், வேய்க்கு உதாரணமாயிற்று. (௬)

## புறத்திறை:—

7. நோக்கருங் குறும்பி னூழையும் வாயிலும்
போக்கற வளைஇப் புறத்திறுத் தன்று.

இ - ள். நோக்கு அரு குறும்பின் - பார்த்தற்கரிய (பகைவரது) அரண்களிலுள்ள, நூழையும் வாயிலும் - சிறுவாயிலிலும் பெருவாயிலிலும், போக்கு அற வளைஇ - யாவரும் புறப்படாதபடிவளைந்து, புறத்து இறுத்தன்று - ஊர்ப்பக்கத்தே தங்கியது. எ - று.

(கு - பு.) புறத்து இன்ற - பசுக்கூட்டங்களுள்ள இடத்தின் புறத்தே போய்த் தங்குதல்; புறஞ்சேரியைவளைத்தலுமாம். போக்கு - போதல்.

வ - று. உய்ந்தொழிவா ரீங்கில்லை யூழிக்கட் டீயேபோன்
முந்தமரு ளேற்றார் முரண்முருங்கத் - தந்தமரின்
ஒற்றினா னாய்ந்தாய்ந் துறுவலி யோரரணஞ்
சுற்றினார் போகாமற் சூழ்ந்து.

இ - ள். உறு வலியோர் - மிகுந்தவலியினையுடைய வீரர், தம்தமரின் - தம்முடைய ஊற்றாராகிய, ஒற்றினான் ஆய்ந்து ஆய்ந்து - ஒற்றராலே ஆராய்ந்து ஆராய்ந்து, முந்து அமருள் ஏற்றார் முரண் முருங்க - முற்பட்ட பூசலில் எதிர்ந்தாருடைய மாறுபாடு கெட, போகாமல் சூழ்ந்து - அவருள் ஒருவரும் தப்பிப்போகாதபடி விசாரித்து, அரணம் - அரணினை, ஊழிக்கண் தீயே போல் - யுகாந்தகாலத்து நெருப்பையொப்ப, சுற்றினார் - வளைந்துகொண்

டார்; ஆதலால், உழுந்தொழிவார் ஈங்கு இல்லை; பிழைத்திருப்பார் இவ்விடத்தில் யாவருமில்லை. எ - று.

சூழ்ந்து சுற்றினரென்க.

(கு - பு.) தமரின், இன் - வேண்டாவழிச்சாரியை. உறுவலியோர் அரணம் சுற்றினரென்றுவந்தமையின், இச்செய்யுள், புறத்திறைக்கு உதாரணமாயிற்று. (எ)

## ஊர்க்கொலை:—

8. விரைபரி கடவி வில்லுடை மறவர்
குரையழ னடப்பக் குறும்பெறிந் தன்று.

இ - ள். வில்லுடை மறவர் - வில்லினையுடைய வீரர், விரை பரி கடவி - கடுகின செலவையுடைய குதிரைகளை முடுக்கி, குரை அழல் நடப்ப - முழங்குகின்ற நெருப்புப்பரவ, குறும்பு எறிந்தன்று - (பகைவருடைய) அரணினை அழித்தது. எ - று.

(கு - பு.) ஊர் கொலை - புறஞ்சேரியில் நிரைகாத்துநின்றவரைக்கொன்று பகையறுத்தல்,

வ - று. இகலே துணையா வெரிதவழச் சீறிப்
புகலே யரிதென்னார் புக்குப் - பகலே
தொலைவிலார் வீழத் தொடுகழ லார்ப்பக்
கொலைவிலார் கொண்டார் குறும்பு.

இ - ள். கொலை வில்லார் - கொலைத்தொழிலாற் சிறந்த வில்லினையுடையவீரர், இகலே துணையா - மாறுபாட்டையே துணையாகக்கொண்டு, எரி தவழ சீறி - நெருப்பு நடக்கும்வண்ணம் கோபித்து, புகல் அரிது என்னார் - புகுதற்கரியஇடமென்று பாராமல், புக்கு - உள்ளேபுகுந்து, தொலைவு இல்லார் வீழ - ஒருவருக்கும் தோல்வியில்லாதபகைவீரர்பட, தொடு கழல் ஆர்ப்ப - கட்டிய வீரக்கழல் ஆரவாரஞ்செய்ய, பகலே குறும்பு கொண்டார் - பகற்பொழுதிலே அரணினைக் கைக்கொண்டார். எ - று.

(கு - பு.) 'எரிதவழச்சீறி' என்றும், 'தொலைவிலார்வீழ' என்றும் வந்தமையின், இச்செய்யுள், ஊர்க்கொலைக்கு உதாரணமாயிற்று. (அ)

## ஆகோள்:—

9. வென்றார்த்து விறன்மறவர்
கன்றோடு மாதழீஇயன்று.

இ - ள். விறல் மறவர் - வெற்றியினையுடைய வீரர், வென்று ஆர்த்து - பகைவருடைய முனையினைக்கடந்து ஆரவாரித்து, கன்றோடும் ஆ தழீஇயன்று - கன்றுகளுடனே பசுநிரையைக் கைக்கொண்டது. எ - று.

(கு - பு.) ஆ கோள் - நிரையை அகப்படுத்திக்கொள்ளல்.

வ - று. கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தா
நெடுவரை நீள்வேய் நரலு - நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற
நிணநிரை வேலார் நிலை.

இ - ள். நிணம் நிரை வேலார் - நிணத்தைக் கோத்த வேலினையுடையார், நெடு வரை - உயரியமலையிடத்து, நீள் வேய் நரலும் நடுவூர் - நீண்டமூங்கிலொலிக்கும் ஊர் நடுவில், கணம் நிரை கைக்கொண்டு - திரண்டபசுவினைக் கைப்பற்றி, கை அகலார் - அவ்விடத்துநின்றும் நீங்காராய், நின்ற நிலை—, கொடுவரி கூடி - உடலில் வளைந்த கோடுகளையுடைய புலிகள் தம்மில் ஒத்து, குழூஉக்கொண்டனைத்து - திரட்சிகொண்ட தன்மையையுடையது. எ - று.

ஆல் - அசை.

(கு - பு.) நிலை குழூஉக்கொண்டனைத்தென்க. இது கண்டோர்கூற்று. 'கணநிரைகைக்கொண்டு நின்றநிலை' என்றதனால், இச்செய்யுள், ஆகோளென்னுந்துறைக்கு உதாரணமாயிற்று. (கூ)

## பூசன் மாற்று :—

10. கணம்பிறங்கக் கைக்கொண்டார்
பிணம்பிறங்கப் பெயர்த்திட்டன்று.

இ - ள். கணம் பிறங்க கைக்கொண்டார் - நிரைத்திரட்சிபெருக்கக் கைப்பற்றின கரந்தையாருடைய, பிணம் பிறங்க பெயர்த்திட்டன்று - பிணம் பெருக்கும்படி (வெட்சியார்) கெடுத்தது. எ - று.

(கு - பு.) பூசல் - பேரொலி. மாற்று - மாற்றுதல்: பசுவை மீட்டுக்கொண்டு செல்லுதற்குப் பேரொலியோடும் வந்த கரந்தையாரை வெட்சியார் மாற்றுதல். கரந்தையார் - நிரையை மீட்டற்காகக் கரந்தைப்பூவைச் சூடி வந்தவர்.

வ - று. சூழ்ந்த நிரைபெயரச் சுற்றித் தலைக்கொண்டார்
வீழ்ந்தனர் வீழ்ந்தார் விடக்குணிய - தாழ்ந்த
குலவுக் கொடுஞ்சிலைக்கைக் கூற்றனையா ரெய்த
புலவுக் கணைவழிபோய்ப் புள்.

இ - ள். சூழ்ந்த நிரை பெயர - (வெட்சியார்) வளைந்துகொண்ட நிரைமீள, சுற்றி தலைக்கொண்டார் வீழ்ந்தனர் - சூழ்ந்துகிட்டின கரந்தையார் பட்டுவீழ்ந்தார், வீழ்ந்தார் விடக்கு உணிய - அங்ஙனம் வீழ்ந்தவருடைய தசையைத் தின்னவேண்டி, குலவு கொடு சிலை கை - வளைதலையுடைய கொடிய வில்லூற்சிறந்த கையினையுடைய, கூற்று அனையார் எய்த - கூற்றத்

தையொப்பாரெய்தூ புலவு களை வழி போய் - புலால் நாறும் அம்புபோன வழியேபோய், புள் தாழ்ந்த - பறவைகள் படிந்தன. எ - று.

(கு - பு.) பட்டு - இறந்து, பறவைகள் படிதல், தசையையுண்ணவே ண்டி. 'நிரைபெயரச் சுற்றித் தலைக்கொண்டார் வீழ்ந்தனர்' என்றமையின், இச்செய்யுள், பூசன்மாற்றென்னுந் துறைக்கு உதாரணமாயிற்று. (கo)

சுரத்துய்த்தல்:—

11. அருஞ்சுரத்து மகன்கானத்தும்
வருந்தாம னிரையுய்த்தன்று.

இ - ள். அரு சுரத்தும் - அரியவழியிடத்தும், அகன் கானத்தும் - பரந்த காட்டின்கண்ணும், வருந்தாமல் - நோவுபடாதபடி, நிரை உய்த்தன்று - பசுநிரையைச் செலுத்தியது. எ - று.

(கு - பு.) சுரத்து உய்த்தல் - அரியவழியில் இன்புறுத்தி நிரைகளைக் கொண்டுபோதல். இத்துறை தொல்காப்பியத்தில், 'நோயின்றுய்த்தல்' என்று வழங்கப்பட்டுள்ளது.

வ - று. புன்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன் செல்கென்னும்
வின்மே லசைஇயகை வெல்கழலான் - றன்மேற்
கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டு
நெடுவரை நீழ னிரை.

இ - ள். வில் மேல் அசைஇய கை - வில்லின்மேல்வைத்த கையினை யும், வெல் கழலான் - வெல்லும் வீரக்கழலினையுமுடையவீரன், தன் மேல்—,(கரந்தையார்) கடு வரை நீரின் - செங்குத்தானமலையினின்றும் வீழாநின்ற நீர்போல, கடுத்து வர கண்டும் - முடுகிவரப் பார்த்தும், புல் மேய்ந்து - புல்லைமேய்ந்து, நெடு வரை நீழல் - நெடியவரையினது நிழலி லே, அசைஇ - இளைப்பாறி, நிரை - பசுக்கூட்டம், புணர்ந்து உடன் செல்க என்னும - இனத்துடன்கூடித் தம்மில் ஒக்கப்போவனவாகவென்று சொல் லாநின்றான். எ - று.

கழலான், கண்டும் ஆனிரையைப் புணர்ந்துடன்செல்கென்னுமெனக் கூட்டுக.

(கு - பு.) இது கண்டோர்கூற்று. வெல்கழலான், நிரை புல்லைமேய் ந்து அசைஇப் புணர்ந்து உடன்செல்கவென்கின்றானென்றமையின், இச் செய்யுள், சுரத்துய்த்தலென்னுந்துறைக்கு உதாரணமாயிற்று. (கக)

தலைத்தோற்றம்:—

12. உரவெய்யோ னினந்தழீஇ
வரவுணர்ந்து கிளைமகிழ்ந்தன்று.

இ - ள். உரம் வெய்யோன் - வலியினைவிரும்பியவீரன், இனம் தழீஇ வரவு உணர்ந்து - ஆனினத்தைக் கைக்கொண்டுவருதலை அறிந்து, கிளை மகிழ்ந்தன்று - உறவுமுறையார் மனமகிழ்ந்தது. எ - று.

(கு - பு.) தலை - இடம். தோற்றம் - தோன்றுதல்; கவலையுற்ற தமரிடத்தே, நிரைகொள்ளப்போன தலைவன் அந்நிரையுடனே தோன்றுதல்.

வ - று. மொய்யண லானிரை முன்செல்லப் பின்செல்லு
மையணற் காளை மகிழ்துடி - கையணல்
வைத்த வெயிற்றியர் வாட்க ணிடனாட
வுய்த்தன் றுவகை யொருங்கு.

இ - ள். மொய் அணல் ஆனிரை முன் செல்ல - செறிந்ததாடியையுடைய பசுநிரை முன்னேபோக, பின் செல்லும் மை அணல் காளை - பின்னே வரும் மயிராற்கறுத்த கன்னத்தினையுடையதலைவன், மகிழ் துடி - மகிழ்ந்து கொட்டும் துடியானது, கை அணல் வைத்த எயிற்றியர் - (நிரைகொண்டுவரப்போன வெட்சியாருடைய நிலைமையை அறியாத வருத்தத்தால்) கையைக் கன்னத்திலேவைத்த வேட்டுவிச்சியருடைய, வாள் கண் இடன் ஆட - வாள் போன்ற இடக்கண் துடிக்கும்படி, ஒருங்கு உவகை உய்த்தன்று - பலர்க்கும் ஒக்க மகிழ்ச்சியைச் செலுத்தியது. எ - று.

மகிழ்துடி உவகையை ஒருங்கு உய்த்தன்றென்க.

மகிழ்துடி - வினைத்தொகை.

(கு - பு.) தாடி - பசுவினது கழுத்தின்கீழுள்ள உறுப்பு; இஃது அலைதாடியெனவும் வழங்கும். துடி - உடுக்கை. வேட்டுவிச்சியர் - வேடர்மகளிர். மகளிர்களுடைய இடக்கண் துடித்தல் நன்னிமித்தம். பின்செல்லும் காளை துடி பலர்க்கும் உவகையை உய்த்ததென்றதனால், இச்செய்யுள், தலைத்தோற்றத்திற்கு உதாரணமாயிற்று. இது கண்டோர் கூற்று. (கஉ)

## தந்து நிறை:—

13. வார்வலந்த துடிவிம்ம
ஊர்புகல நிரையுய்த்தன்று.

இ - ள். வார் வலந்த துடி விம்ம - வாராலேகட்டின துடி ஒலிக்க, ஊர் புகல - ஊரிலுள்ளார் விரும்பும்படி, நிரை உய்த்தன்று - ஆனிரையை (மன்றத்திடத்துச்) செலுத்தியது. எ - று.

(கு - பு.) தந்துநிறை - வீரர் தாங்கொண்ட நிரையைத் தம்மூர்ப்புறத்தே கொணர்ந்து நிறுத்தல். வலத்தல் - கட்டுதல். மன்றம் - பொதுவிடம்.

வ - று. தண்டா விருப்பின டன்னை தலைமலைந்த
வண்டார் கமழ்கண்ணி வாழ்கென்று - கண்டார

எணிநிரை வாண்முறுவ லம்மா வெயிற்றி
மணிநிரை மல்கிய மன்று.

இ - ள். அணி நிரை வாள் முறுவல் - அழகினையும் வரிசையையும் ஒளியையுமுடைய பல்லினையும், அம் மா எயிற்றி - அழகிய பெருமையினையுமுடைய மறத்தி, தண்டா விருப்பினள் - தணியாத உவகையினையுடையளாகி, தன் ஐ தலை மலைந்த வண்டு ஆர் கமழ் கண்ணி வாழ்க என்று - தன்னுடைய தலைவன் தலையிலே சூடின வண்டுநிறைந்த நறுநாற்றத்தினையுடையமாலை வாழ்வதாகவென்று சொல்லி, மணி நிரை மல்கிய மன்று கண்டாள் - மணியையணிந்த பசுக்கண்மிக்க மன்றத்தை நோக்கினாள். எ - று.

எயிற்றி கண்டாளெனக்கூட்டுக.

(கு - பு.) ஐ - தலைவன். 'கண்ணிவாழ்க' என்றல் மரபு; பதிற்றுப்பத்து, கூஉ: "யாங்குவல் லினையோ வாழ்கநின் கண்ணி" எனவும், சிந்தாமணி, விமலையாரிலம்பகம், உ: "வாழ்கநுங் கண்ணி மாதோ" எனவும் வருதல் காண்க. மணிநிரைமல்கியமன்றை எயிற்றி கண்டாளென்றதனால்,இச்செய்யுள், தந்துநிறையாயிற்று. இது கண்டோர்கூற்று. (கரு)

பாதீடு:—

14. கவர்கணைச் சுற்றங் கவர்ந்த கணநிரை
அவரவர் வினைவகை யறிந்தீந் தன்று.

இ - ள். கவர் கணை சுற்றம் - கவர்த்ததலை யம்பினையுடைய கிளைகள், கவர்ந்த கணம் நிரை - கொள்ளைகொண்ட கூட்டமான பசுநிரையை, அவரவர்வினைவகை அறிந்து - செய்தார் செய்ததொழில் வகையை அறிந்து, ஈந்தன்று - கொடுத்தது. எ - று.

(கு - பு.) பாதீடு - தாம்கொண்ட நிரையைப்பகுத்துக் கொடுத்தல்; 'ஈத்தலும் ஈதலும்போலப் பாத்தலும் பாதலும் ஒன்று' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்; (தொல். புறத், ரு - ம் சூ. உரை).

வ - று. ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் - விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்
கூறிட்டார் கொண்ட நிரை.

இ - ள். விள்வாரை - தம்முடன் வேறுபடுவாரை, மாறுஅட்ட வென்றி மறவர் - மாறுபாடு கெடுத்த வெற்றியினையுடைய மறவினையாளர், கொண்டநிரை - தாம் கைக்கொண்டுவந்தநிரையை, ஒள் வாள் மலைந்தார்க்கும், அழகிய வாட்போரினை மேற்கொண்டோர்க்கும், ஒற்று ஆய்ந்து உரைத்தார்க்கும் - ஒற்றுத் தெரிந்துசொன்னோர்க்கும், புள் வாய்ப்ப சொன்ன புலவர்க்

கும் - நிமித்தம் தப்பாதவகைசொன்ன அறிவுடையோர்க்கும், தம் சீறூரில் - தம்முடைய சீறூரிடத்து, கூறிட்டார் - பங்கிட்டார். எ-று.

(கு - பு.) கொண்டநிரையைக் கூறிட்டாரென்றலின், இச்செய்யுள், பாதீடாயிற்று. இது கண்டோர்கூற்று. இத்துறைப்பொருள், சிலப்பதிகாரம், வேட்டுவவரி: "இளமா வெயிற்றி யிவைகாணின் னையர், தலைநாளை வேட்டத்துத் தந்த நிரைகள், கொல்லன் றுடியன் கொளைபுணர் சீர்வல்ல, நல்லியாழ்ப் பாணர்த முன்றி னிறைந்தன." என்றும், "முருந்தே ரிளநகை காணாய்நின் னையர், கரந்தை யலறக் கவர்ந்த நிரைகள், கள்விலை யாட்டிநல் வேய்தெரி கானவன், புள்வாய்ப்பச் சொன்னகணி முன்றி னிறைந்தன" என்றும், "சுயமல ருண்கணாய் காணாய்நின் னைய, ரயலூ ரலற வெறிந்தநல் லானிரைக, ணயனின் மொழியி னரைமுது தாடி, யெயின ரெயிற்றியர் முன்றி னிறைந்தன" எனவும் வரும் செய்யுட்களில் அமைந்திருத்தல் காண்க. (௧௪)

## உண்டாட்டு:—

15. தொட்டிமிழுங் கழன்மறவர்
மட்டுண்டு மகிழ்தூங்கின்று.

இ-ள். தொட்டு இமிழும் கழல் மறவர் - கட்டப்பட்டு ஒலிக்கும் வீரக்கழலினையுடைய வீரர், மட்டு உண்டு - மதுவையுண்டு, மகிழ் தூங்கின்று - மனங்களித்து ஆடியது. எ-று.

(கு - பு.) உண்டாட்டு - வீரர் தாங்கொண்டநிரையைப் பகுத்துக்கொடுத்தபின்பு சுற்றத்தாரோடு கள்ளுண்டு மகிழ்ந்து விளையாடுதல்.

வ-று. இளிகொண்ட தீஞ்சொ லிளமா வெயிற்றி
களிகொண்ட நோக்கங் கவற்றத் - தெளிகொண்ட
வெங்கண் மலிய விளிவதுகொல் வேற்றூர்மேற்
செங்கண் மறவர் சினம்.

இ-ள். வேற்றூர் மேல் - பகைவர்மேல் தோன்றிய, செங்கண் மறவர் சினம் - சிவந்த கண்களையுடைய வீரர்களின் கோபம், இளி கொண்ட தீசொல் மா இள எயிற்றி - இளியென்னும் இசையினைக்கொண்ட இனிய சொல்லினையும் பெருமையையுமுடைய இளைய வேட்டுவிச்சியின், களி கொண்ட நோக்கம் கவற்ற - களிப்பைக்கொண்ட பார்வைவருத்தவும், தெளி கொண்ட வெம் கள் மலிய - தெளிவுகொண்ட வெவ்விய கள்ளையுண்டமகிழ்ச்சிமிகவும், விளிவதுகொல் - கெடுவதுபோலும். எ-று.

சினம் கவற்ற, மலிய விளிவதுகொலென்க்கூட்டுக.

இது, "ஒருமை சுட்டிய" (தொல். சொல். எச்ச. ௬௫ - ம் சூ.) என்பதனுளமைந்த, "எவ லிளையர் தாய்வயிறு கரிப்ப" என்பது போலாம்.

(கு - பு.) இனி - ஒருவகையிசை. வெட்டுவிச்சி - வேடமகள். "ஒருமை சுட்டிய" என்னும் சூத்திரமும் அதனுரைமுதலியனவும் வருமாறு:—
"ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி, பன்மைக் காகு மிடனுமா ருண்டே."
இ - ள்: ஒருமைக் குரிய பெயர்ச்சொல் பன்மைக்காகும் இடமுமுண்டு. எ - று. உ - ம்: '"எவலிளையர் தாய்வயிறு கரிப்ப" என்புழித் தாயென்னும் ஒருமைசுட்டியபெயர் இளையரென்பதனால், தாயரென்னும் பன்மையையுணர்த்தியவாறு காண்க' என்பது சேனாவரையருரை. 'மறவருடையசினம், எயிற்றியின் நோக்கம் கவற்றவும் கள் மலியவும் விளிவதுபோலும்' என்றதனால், இஃது உண்டாட்டாயிற்று. (கசு)

## கொடை:—

16. ஈண்டியநிரை யொழிவின்றி
வேண்டியோர்க்கு விரும்பிவீசின்று.

இ - ள். ஈண்டிய நிரை ஒழிவின்றி - திரண்ட பசுநிரையுள் ஒன்றும் தப்பாமே, வேண்டியோர்க்கு - (தம்மை) வேண்டினவர்களுக்கு, விரும்பி வீசின்று - விருப்பமுற்றுக் கொடுத்தது. எ - று.

(கு - பு.) கொடை - தாம்கொண்ட நிரையை இரவலர்க்குக் கொடுத்து மனமகிழ்தல்.

வ - று. அங்கட் கிணையன் றுடியன் விறலிபாண்
வெங்கட்கு வீசும் விலையாகும் - செங்கட்
செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி
வரிச்சிலையாற் றந்த வளம்.

இ - ள். செங்கண் - சிவந்த கண்ணிணையுடையராய், செரு சிலையா மன்னர் - போருக்குப் பின்னிடாத மன்னர், செரு முனையில் சீறி - பூசன் முகத்துக் கோபித்து, வரி சிலையால் தந்த வளம் - வரிதலையுடைய வில்லாலேகொண்ட (ஆனிரையாகிய) செல்வமானது, அம் கண் கிணையன் - அழகிய கண்ணுற்சிறந்த கிணையையுடையவனும், துடியன் - துடிகொட்டுமவனும், விறலி - பாணிச்சியும், பாண் - பாணனும், வெம் கட்கு வீசும் விலையாகும் - வெவ்விய கள்ளிற்குக் கொடுக்கும் விலையாகும். எ - று.

வளம், வெங்கட்கு வீசும் விலையாகுமெனக்கூட்டுக.

(கு - பு.) கிணை - ஒருவகைப்பறை. துடி - உடுக்கை. பாணிச்சி - பாடுபவள். 'போரிற்பெற்ற பசுநிரைகள், கிணையன்முதலியோர் கள்ளுக்குக் கொடுக்கும்விலையாயின' என்றமையின், இச்செய்யுள், கொடையென்னும் துறையாயிற்று. சிலப்பதிகாரம், வேட்டுவவரி: "இளமா வெயிற்றி யிவைகாணின் னையர், தலைநாளை வேட்டத்துத் தந்த நிரைகள், கொல்லன் றுடியன் கொளைபுணர் சீர்வல்ல, நல்லியாழ்ப் பாணர்த முன்றி னிறைந்தன."

என்னும்செய்யுளில் இத்துறைப்பொருளமைந்திருத்தல்காண்க. இது கண்டோர் கூற்று. (கக)

## புலனறிசிறப்பு :—

17. வெம்முனை நிலை யுணர்த்தியோர்க்குத்
தம்மினுமிகச் சிறப்பீந்தன்று.

இ - ள். வெம் முனை நிலை உணர்த்தியோர்க்கு - வெவ்விய வேற்றுப் புலத்தினது நிலைமையை அறிவித்தோர்க்கு, தம்மினும் மிக சிறப்பு ஈந்தன்று - தம்முடைய பங்கினும்பெருகச் சிறப்புக்கொடுத்தது. எ - று.

(கு - பு.) புலன் அறி சிறப்பு - வேற்றுப்புலத்தை அறிந்துவந்தோருக்கு அதிகப்பங்குகொடுத்தல்.

வ - று. இறுமுறை யெண்ணா திரவும் பகலுஞ்
செறுமுனையுட் சென்றறிந்து வந்தார் - பெறுமுறையி
னட்டுக் கனலு மயில்வேலோ யொன்றிரண்
டிட்டுக் கொடுத்த லியல்பு.

இ - ள். அட்டு கனலும் அயில் வேலோய் - கொன்று (சினந்தணியாமல்) எரியும் கூரியவேலினையுடையோய், இறும் முறை எண்ணாது - தாம் இறும் வகையை ஆராயாதே, இரவும் பகலும் - இரவின்கண்ணும் பகலின்கண்ணும், செறும் முனையுள் சென்று - கொல்லும் பகைப்புலத்துப் போய், அறிந்துவந்தார் பெறும் முறையின் - ஆராய்ந்துவந்தவர்கள் பெறக்கடவபங்கின்மேலும், ஒன்று இரண்டு இட்டு கொடுத்தல் இயல்பு - ஒன்றாதல் இரண்டாதல் பசு ஏற்றிக்கொடுத்தல் முறைமை. எ - று.

(கு - பு.) 'பகைப்புலத்துச்சென்று அறிந்துவந்தார்க்கு ஒன்றிரண்டு இட்டுக்கொடுத்தலியல்பு' என்றதனால், இச்செய்யுள், புலனறிசிறப்பாயிற்று. ()

## பிள்ளைவழக்கு :—

18. பொய்யாது புண்மொழிந்தார்க்கு
வையாது வழக்குரைத்தன்று.

இ - ள். பொய்யாது புள் மொழிந்தார்க்கு - தப்பாமல் நிமித்தஞ்சொன்னவர்க்கு, வையாது வழக்கு உரைத்தன்று - வஞ்சியாதே பெறுமுறைமையைச் சொல்லியது. எ - று.

(கு - பு.) பிள்ளைவழக்கு - கரிக்குருவிநிமித்தம் சொன்னவர்களுக்குக் கொடுக்குமுறைமை; பிள்ளை - ஆகுபெயர், வழக்கு - கொடுக்கும் முறைமை.

வ - று. புல்லார் நிரைகருதி யாஞ்செல்லப் புண்ணலம்
பல்லா றறியப் பகர்ந்தார்க்குச் - சொல்லாற்

கடஞ்சுட்ட வேண்டா கடுஞ்சுவ்ரயா னான்கு
குடஞ்சுட் டினத்தாற் கொடு.

இ - ள். புல்லார் நிரை கருதி - பகைவரது ஆனிரையைக் கொள்ளநினை ந்து,யாம் செல்ல - யாம் போக, புள் நலம் - நிமித்தநன்மையை, பல்லார் அறிய பகர்ந்தார்க்கு-பலரும் உணரும்படி சொன்னார்க்கு,சொல்லால் கடம் சுட்ட வேண்டா - மொழியாற் பெறுமுறைமை இதுவென்று கருதவேண்டா, குடஞ்சுட்டு கடு சுவை ஆன் நான்கு-ஒன்றொரு குடம்பால்போதுமென்று கருதப் படுகிற மிக்கமடியினையுடைய பசு நான்கு, இனத்தால் கொடு - இனங்களோடும் கொடு. எ - று.

கடஞ்சுட்டவேண்டா கொடுவென்க.

(கு - பு.) 'புண்ணலம் பகர்ந்தார்க்கு இனங்களோடும் கடுஞ்சுவையையுடைய ஆன் நான்குகொடு' என்றமையின், இச்செய்யுள், பிள்ளைவழக்காயிற்று. (கஅ)

## துடி நிலை :—

19. தொடுகழன் மறவர் தொல்குடி மரபிற்
படுகண் ணிமிழ்துடிப் பண்புரைத் தன்று.

இ - ள். தொடு கழல் மறவர் - கட்டும் கழலையுடைய வீரர், தொல் குடி மரபில் - பழங்குடி முறைமையில், படு கண் இமிழ் துடி - மிக்க கண்ணினையுடைத்தாய் ஒலிக்கும் துடியைக்கொட்டுமவனது, பண்பு உரைத்தன்று - குணத்தைச்சொல்லியது. எ - று.

(கு - பு.) துடிகொட்டுமவனைத் துடியென்றது ஆகுபெயர்.

வ - று. முந்தை முதல்வர் துடிய ரிவன்முதல்வ
ரெந்தைக்குத் தந்தை யிவனெனக்கு - வந்த
குடியொடு கோடா மரபினோற் கின்னும்
வடியுறு தீந்தேறல் வாக்கு.

இ - ள். முந்தை முதல்வர் துடியர் இவன் முதல்வர் - என் பாட்டன் முதலாயினோர்க்குத் துடிகொட்டினோர் இவன் பாட்டன் முதலாயினோர்; எந்தைக்கு தந்தை - என் தந்தைக்கு இவன்தந்தை துடிகொட்டினான்; இவன் எனக்கு - இவன் எனக்குத் துடிகொட்டுவான்; வந்த குடியொடு கோடா மரபினோற்கு - இங்ஙனம் வழிவந்த குடிமுறைமையோடு பிறழாத முறைமையினையுடையவனுக்கு, இன்னும் - இன்னமும், வடி உறு தீ தேறல் வாக்கு - வடித்தலுற்ற தித்தித்த மதுவினது தெளிவை வார்ப்பாயாக. எ - று.

(கு - பு.) முந்தை - பாட்டன்; வில்லி. பாரதம், நிரைமீட்சிச்சருக்கம், அஅ: "நின்னொடுங் கிருபனோடு நின்மக னோடு முந்தை, தன்னொடும் புரியேன் வெம்போர்" என்பதில் வீட்டுமனை முந்தையென்று அருச்சுனன் கூறி

யிருத்தல்காண்க. இனி, போரின்முடிவில் வீரர் தம்மை அலங்கரித் தூக் கொண்டு துடிகொட்டுபவர்களோடுகூடி ஊரை வலம்வருதலும் துடிநிலையெனப்படும்; "நித்திலஞ்செய் பட்டமு நெற்றித் திலகமு, மொத்திலங்க மெய்பூசி யோர்ந்துடீஇத் - தத்தம், துடியரோ டேர்ப்புறஞ் சூழ்ந்தார் மறவர், குடிநிலை பாராட்டிக் கொண்டு" (தொல். புறத். ச-ம் சூ. ந. உரை) என்பதனானுணர்க. 'வந்த குடியோடுகோடா மரபினோற் கின்னும் வடியுறு தீந்தேறல் வாக்கு' என்றதனால், இச்செய்யுள், துடிநிலையாயிற்று. (கக)

## கொற்றவைநிலை:—

20. ஒளியினீங்கா விறற்படையோ
ளளியினீங்கா வருளுரைத்தன்று.

இ - ள். ஒளியின் நீங்கா - விளக்கத்தினின்றும் ஒழியாத, விறல் படையோள் - வெற்றியால்மிக்க ஆயுதத்தையுடைய துர்க்காதேவியது, அளியின் நீங்கா - இரக்கத்தினின்றும் ஒழியாத, அருள் உரைத்தன்று - கருணையைச் சொல்லியது. எ - று.

(கு - பு.) கொற்றவை நிலை - துர்க்காதேவியின் நிலைமை.

வ - று. ஆளி மணிக்கொடிப் பைங்கிளிப் பாய்கலைக்
கூளி மலிபடைக் கொற்றவை - மீளி
யரண்முருங்க வாகோள் கருதி னடையார்
முரண்முருங்கத் தான்முந் துறும்.

இ - ள். மீளி - தலைவனானவன், அரண் முருங்க - பகைவருடைய அரண்கள் முறிய, ஆகோள் கருதின் - ஆனிரைகொள்ளுதலை நினைப்பானாயின், ஆளி மணி கொடி - சிங்கத்தாற்சிறந்த அழகிய கொடியினையும், பைங்கிளி - பசியகிளியினையும், பாய் கலை - பாயுங் கலைமானினையும், கூளி மலி படை - பேய்மிக்க படையினையுமுடைய, கொற்றவை - துர்க்காதேவி, அடையார் முரண் முருங்க - பகைவருடைய மாறுபாடு கெடும்வண்ணம், தான் முந்துறும் - தான் முன்னே எழுந்தருளுவாள். எ - று.

(கு - பு.) 'கொற்றவை பகைவருடைய முரண்கெடும்படி தான் முந்துறுவாள்' என்றதனால், இச்செய்யுள், கொற்றவை நிலையாயிற்று. (உ0)

## வெறியாட்டு:—

21. வாலிழையோர் வினைமுடிய
வேலனோடு வெறியாடின்று.

இ - ள். வால் இழையோர் - அழகிய ஆபரணத்தையுடையவர், வினை முடிய - தாம் நினைத்ததொழில் முடியும் வண்ணம், வேலனோடு - முருகபூசைபண்ணுபவனோடு, வெறி ஆடின்று - வள்ளிக்கூத்தை ஆடியது. எ - று.

(கு - பு.) முருகபூசை - முருகக்கடவுளுடையபூசை.

வ - று. *காணி லரனுங் களிக்குங் கழன்மறவன்
பூணிலங்கு மென்முலைப் போதரிக்கண் - வாணுத
ருன்முருகு மெய்ந்நிறீஇத் தாமம் புறந்திளைப்ப
வேன்முருகற் காடும் வெறி.

இ - ள். கழல் மறவன் - வீரக்கழலினையுடைய மறவினையாளன்றன், பூண் இலங்கு மென்முலை - ஆபரணம்விளங்கும் மெல்லிய தனத்தினையும், போது அரி கண் - பூப்போன்ற அரிபரந்த கண்ணினையும், வாள் நுதல்தான் - ஒளிமிக்க நுதலினையும் உடையவடான், முருகு மெய் நிறீஇ - நறுநாற்றத்தை உடம்பிலே நிறுத்தி, தாமம் புறம் திளைப்ப - மாலை பக்கத்தே அசைய, வேல் முருகற்கு ஆடும் வெறி - வேலினையுடைய பிள்ளையார்க்கு ஆடும் வள்ளிக்கூத்தை, காணில் அரனும் களிக்கும் - கண்டானாயின் நிருத்தப்பிரியனாகிய சிவபெருமானும் மகிழ்வன். எ - று.

வள்ளிககூதததைககாணின, அரனும களிக்குமெனக.

(கு - பு.) வள்ளிக்கூத்து - வள்ளிநாயகியின் வேடங்கொண்டு ஆடுங் கூத்து. 'வேன்முருகற்கு ஆடும் வெறியைக் கண்டால் அரனும் களிக்கும்' என்றதனால், இச்செய்யுள், வெறியாட்டென்னும் துறையாயிற்று. (உக)

வெட்சித்திணைப்பாட்டு இரண்டும் துறைப்பாட்டுப் பத்தொன்பதும் முடிந்தன.

(கு - பு.) வெட்சித்திணைப்பாட்டு இரண்டாவன: "மண்டுமெரியுள்" என்பதும், "அருஅ நிலைச்சாடி" என்பதும். துறைப்பாட்டுப் பத்தொன்பதாவன: "நெடிபடுகானம்" என்பது முதலியன.

முதலாவது

வெட்சிப்படலம் முற்றிற்று.

## இரண்டாவது
# கரந்தைப்படலம்.

கதமலி கரந்தை கரந்தை யரவ
மதரிடைச் செலவே யரும்போர் மலைதல்
புண்ணொடு வருதல் போர்க்களத் தொழித
லாளெறி பிள்ளை பிள்ளைத் தெளிவே
பிள்ளை யாட்டொடு கையறு நிலையே
நெடுமொழி கூறல் பிள்ளைப் பெயர்ச்சி
வேத்தியன் மலிபே மிகுகுடி நிலையென
வருங்கலை யுணர்ந்தோ ரவைபதி னொன்குங்
கரந்தையுங் கரந்தைத் துறையு மென்ப.

என் - னின், கரந்தைத்திணையும் துறையுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள். கரந்தை, கரந்தையரவம், அதரிடைச்செலவு, போர்மலைதல், புண்ணொடுவருதல், போர்க்களத்தொழிதல், ஆளெறிபிள்ளை, பிள்ளைத்தெளிவு, பிள்ளையாட்டு, கையறுநிலை, நெடுமொழிகூறல், பிள்ளைப்பெயர்ச்சி, வேத்தியன்மலிபு, குடிநிலையென இவைபதினொன்கும் கரந்தைத்திணையும் அதன் துறைகளுமாமென்று கூறுவர் உணர்ந்தோர். எ - று.

கு - பு. கதம் - கோபம். கரந்தை - கரந்தைத்திணை. கரந்தைத்துறைகள், கரந்தையரவமுதலியன. ஏகாரங்கள் எண்ணுப்பொருளன.

### கரந்தை:—

22. மலைத்தெழுந்தோர் மறஞ்சாயத்
தலைக்கொண்ட நிரைபெயர்த்தன்று.

இ - ள். மலைத்து எழுந்தோர் மறம் சாய - மாறுபட்டு எழுந்தவர்களுடைய மாற்சரியம்கெட, தலைக்கொண்ட நிரை பெயர்த்தன்று - (வெட்சியார்) கைப்பற்றினநிரையை மீட்டது. எ - று.

கு - பு. கரந்தை - வெட்சியார்கைப்பற்றின நிரையைமீட்டல்; இவ்வொழுக்கத்திற்குக் கரந்தைப்பூச்சூடுதலும் உரித்தென்பர்; கரந்தை ஒருவகைப்பூடு; அது கொட்டைக்கரந்தையெனவும் வழங்கும்; புறநானூறு, உசுக: "நாகுமுலை யன்ன நறும்பூங் கரந்தை, விரகறி யாளர் மரபிற் சூட்ட, நிரையிவட் டந்து நடுகல் லாகிய வென்வேல் விடலை" என்பதனானும்,

வில்லி. பாரதம், நிரைமீட்சிச்சருக்கம், கரு: "செய்க்கொண்ட கழுநீர லங் கற்க ரந்தைத்தி ருத்தாமன்மேன், மைக்கொண்ட லெனவில் வளைத்தாறு தம்பு மழைசிந்தினன்" என்பதனுலும் இஃது உணரற்பாலது.

வ - று. அழுங்கனீர் வையகத் தாருயிரைக் கூற்றம்
விழுங்கியபின் வீடுகொண் டற்றாற் - செழுங்குடிக
டாரார் கரந்தை தலைமலைந்து தாங்கோட
னேரார்கைக் கொண்ட நிரை.

இ - ள். செழு குடிகள் - வளப்பத்தினையுடைய மறக்குடிகள், தார் ஆர் கரந்தை தலை மலைந்து - கொத்துநிறைந்த கரந்தைப்பூவைத் தலையிலே சூடி, நேரார் கைக்கொண்ட நிரை - பகைவர்கள் கைப்பற்றின ஆனிரையை, தாம் கோடல் - தாம் கொள்ளுமது, அழுங்கல் நீர் வையகத்து - ஆரவாரியா நின்ற கடல்சூழ்ந்த பூமியில், ஆருயிரை - பெறுதற்கரியவுயிரை, கூற்றம் விழு ங்கியபின் - கூற்றுவன் உண்டபின்பு, வீடு கொண்டற்று - மீட்டதன்மைத்து. எ - று.

கோடல் வீடுகொண்டற்றென்க.

ஆல் - அசை.

கு - பு. 'பகைவர்கைக்கொண்டநிரையைத் தாம்கோடல் வீடுகொண்ட ற்று' என்றதனல், இச்செய்யுள், கரந்தைத்திணையாயிற்று (க)

## கரந்தையரவம்:—

23. நிரைகோட் கேட்டுச் செய்தொழி லொழிய
விரைவனர் குழூஉம் வகையுரைத் தன்று.

இ - ள். நிரை கோள் கேட்டு - பசுநிரையைக் கைப்பற்றினமைகேட்டு, செய்தொழில் ஒழிய-செய்யாநின்ற காரியம் தவிராநிற்க,விரைவனா குழூஉம் வகை உரைத்தன்று - கடுகினராகித் திரளும் கூறுபாட்டைச் சொல்லி யது. எ - று.

கு - பு. கரந்தையரவம் - நிரைமீட்டற்குரியவீரர் கரந்தைப்பூச்சூடிச்செ ல்லுதலாலுண்டாகியமுழக்கம்; இது 'படையியங்கரவம்' என்றும் கூறப்ப டும். வெட்சியார் நிரைகொண்டமைகேட்ட ஊரிலுள்ளாரெல்லாரும் தத்தம் தொழிலைவிட்டு நிரைமீட்கச் செல்லுதலின், 'கேட்டுச்செய்தொழிலொழிய' என்றார்.

வ - று. காலார் கழலார் தடிஞ்சிலையார் கைக்கொண்ட
வேலார் வெருவந்த தோற்றத்தார் - காலன்
கிளர்ந்தாலும் போல்வார் கிணைப்பூசல் கேட்டே
யுளர்ந்தார் நிரைப்பெயர்வு மூண்டு.

இ - ள். காலன் கிளர்ந்தாலும் போல்வார் - கூற்றுவன்கோபித்தாலும் அவனை ஒப்பாராகியவீரர், கிளை பூசல் கேட்டு - வெட்சியாருடைய தடாரிப் பறையின் ஓசையைக்கேட்டு, கால் ஆர் கழலார் - காலிலேநிறைந்த வீரக்கழலினையுடையராய், கடு சிலையார் - கொடியவில்லையுடையராய், கை கொண்ட வேலார் - கையிலே எடுத்த வேலினையுடையராய், வெருவந்ததோற்றத்தார் - அஞ்சத்தக்க காட்சியினையுடையராய், உளர்ந்தார் - அசைந்தார்; (ஆதலால்) நிரை பெயர்வும்உண்டு - வெட்சியார்கொண்ட ஆனிரை மீள்கையும்கூடும். எ - று.

கு - பு. இச்செய்யுள் கண்டோர்கூற்று. கழலொலியோடும் நாணொலியோடும் பிற ஒலியோடும் வீரர்செல்லுதல் புலப்பட, 'காலார் கழலார் கடுஞ்சிலையார்' எனவும், 'உளர்ந்தார்' எனவும் கூறினமையின், இச்செய்யுள், கரந்தையரவமாயிற்று; இத்துறைக்கு, 'அடியதிர ரார்ப்பின ராபெயர்த்தற் கண்ணுய், கடிய மறவர் கதழ்ந்தார் - மடிநிரை, மீளாது மீளார் விறல்வெய்யோர் யாதாங்கொல், வாளார் துடியர் வளம்' (தொல். புறத். ரு) என்னும் செய்யுளை நச்சினார்க்கினியர் உதாரணமாகக் காட்டியிருத்தல் ஈண்டு உணரற்பாலது.

## அதரிடைச்செலவு:—

24. ஆற்றா ரொழியக் கூற்றெனச் சினைஇப்
போற்றார் போகிய நெறியிடை யேகின்று.

இ - ள். ஆற்றார் ஒழிய - போரினைப்பொறாதார் ஊரிலேநிற்க, கூற்றென சினைஇ - (ஆற்றலையுடையவீரர்) காலனையொப்பக் கோபித்து, போற்றார் போகிய நெறி இடை ஏகின்று - பகைவர்போனவழியிடத்தே சென்றது.

கு - பு. அதர் இடை செலவு - பகைவர்போனவழியிலே செல்லுதல்.

வ - று. சங்குங் கருங்கோடுந் தாழ்பீலிப் பல்லியமு
மெங்கும் பறையோ டெழுந்தார்ப்ப - வெங்க
லழற்சுரந் தாம்படர்ந்தா ரான்சுவட்டின் மேலே
நிழற்கதிர்வேன் மின்ன நிரைத்து.

இ - ள். சங்கும்—,கரு கோடும் - கரியவீரக்கொம்பும், தாழ் பீலி பல் இயமும் - தாழ்ந்தபீலியையுடைய பலவிசேடவாச்சியங்களும், பறையோடு எங்கும் எழுந்து ஆர்ப்ப - பறைகளோடு எங்கும் எழுந்து ஆரவாரிப்பாநிற்ப, நிழல் கதிர் வேல் மின்ன நிரைத்து - மிக்க ஒளியையுடைய வேற்படைகள் ஒளிவிடும்படி அவற்றை நிரைத்துக்கொண்டு, வெம் கல் - வெவ்வியகற்களையுடைய, அழல் சுரம் - அழல்பரந்த வழியிலே, ஆன் சுவட்டின் மேலே - ஆனிரைகள்போன அடிப்பாட்டிலே, தாம் படர்ந்தார் - (கரந்தையார்) தாம் போயினார். எ - று.

கு - பு. பீலி - மயிலிறகு. அவற்றை - அவ்வேற்படைகளை. நிரைத்தல் - வரிசைப்படுத்தல். இச்செய்யுள், கண்டோர்கூற்று. பெரும்பொருள்

விளக்கம்:“கங்கை பரந்தாங்குக் கானப் பெருங்கவலை,யெங்கு மறவ ரினைத் தெழுந்தார், தங்கிளைக்கண், மன்றுகாண் வேட்கை மடிசுரப்பத் தோன்றுவ, கன்றுகாண் மெய்குளிர்ப்பீர் கண்டு” (தொல். புறத். ரு. சூ. ௧. உதாரணம்) என்னும் வெண்பா இங்கே அறியற்பாலது. இதிற் கன்றுகாளென்பது விளி. ‘அழற்சுரம்படர்ந்தார்’ என்றதனால், இச்செய்யுள், அதரிடைச்செலவாயிற்று. (ரு)

## போர்மலைதல்:—

25. வெட்சி யாரைக் கண்ணுற்று வளைஇ
யுட்குவரத் தாக்கி யுளர்செருப் புரிந்தன்று.

இ - ள். வெட்சியாரை கண்ணுற்று வளைஇ - வெட்சியாரைக் கிட்டிச் சூழ்ந்து, உட்குவர தாக்கி - அஞ்சும்படிதாக்கி, உளர் செரு புரிந்தன்று - எடுப்பும் சாய்ப்புமான பூசலை மேற்கொண்டது. எ - று.

கு - பு. போர்மலைதல் - சண்டையை மேற்கொள்ளுதல்.

வ - று. புலிக்கணமுஞ் சீயமும் போர்க்களிறும் போல்வார்
வலிச்சினமு மானமுந் தேசு - மொலிக்கு
மருமுனை வெஞ்சுரத் தான்பூசற் கோடிச்
செருமலைந்தார் சீற்றஞ் சிறந்து.

இ - ள். வலி சினமும் - வலியையுடையகோபமும், மானமும் - அபிமானமும், தேசும் - பெருமையும், (ஆகியஇவற்றால்) புலி கணமும் சீயமும் போர் களிறும் போல்வார் - புலியினது திரளையும் சிங்கத்தையும் போரையுடையயானையையும் ஒப்பாராகிய கரந்தையார், ஒலிக்கும் அரு வெம்முனை சுரத்து - ஆரவாரிக்கின்ற கிட்டுதற்கரிய வெவ்விய பகைப்புலவழியிலே, ஆன் பூசற்கு ஓடி - வெட்சியார் நிரைகொண்டாரென்னும் ஆரவாரத்தாற் கடுகி, சீற்றம் சிறந்து - கோபமிக்கு, செரு மலைந்தார் - பூசலை மேற்கொண்டார். எ - று.

(கு - பு.) தேசு பெருமையாதலை, “நினைத்துணைய ராகித்தந் தேசுளடக்கி” (நாலடியார்) என்பதனாலும் உணர்க. பூசற்கு - வேற்றுமை மயக்கம். ‘செருமலைந்தார்’ என்றதனால், இச்செய்யுள், போர்மலைதலாயிற்று. (௬)

## புண்ணொடுவருதல் :—

26. மண்ணோடு புகழ்நிறீஇப்
புண்ணோடு தான்வந்தன்று.

இ - ள். மண்ணோடு புகழ் நிறீஇ - பூமியுடனே இசையை நிறுத்தி, புண்ணோடு தான் வந்தன்று - ஆயுதமபட்டபுண்ணுடனே ஒரு வீரன்றான் வந்தது. எ - று.

(கு - பு.) மண்ணோடுபுகழைநிறுவல் - உலகம் அழியாமல் உள்ள அளவும் புகழை நிலைபெறச்செய்தல்; "பொறுத்தார்க்குப், பொன்றுந்துணையும் புகழ்" (கடுசு) என்னும் திருக்குறளும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையும் ஈண்டு உணரற்பாலன.

வ - று. வெங்குருதி மல்க விழுப்புண் ணுகுதொறூஉ
மிங்குலிகஞ் சோரும் வரையேய்க்கும் - பைங்க
ணினம்போக்கி நின்றா ரிகல்வாட்டி வேந்தன்
மனம்போல வந்த மகன்.

இ - ள். பைங்கண் இனம் - பசிய கண்ணினையுடைய பசுவினத்தை, போக்கிநின்றார் இகல் வாட்டி - முன்னே செலுத்திநின்ற வெட்சியாருடைய மாறுபாட்டைக்கெடுத்து, வேந்தன் மனம்போல வந்த மகன் - மன்னனுடைய நெஞ்சினையொப்பவந்த வீரன், விழு புண் - தன்னுடையமுகத்தினும் மார்பினும்பட்ட புண்ணினின்றும், வெம் குருதி மல்க உகுதொறூஉம் - வெவ்விய உதிரம் மிக விழவிழ, இங்குலிகம் சோரும் வரை ஏய்க்கும் - சாதிலிங்கத்தைச்சொரியும் மலையை ஒப்பான். எ - று.

வீரன், இங்குலிகஞ்சோரும்வரையை ஒப்பானென்க.

வேந்தன்மனம் வெற்றியையேநினையும்.

(கு - பு.) முகத்தினும் மார்பினும்பட்டபுண் விழுப்புணென்றதை, திருக்குறள், எஎசு: "விழுப்புண் படாதநாள்" என்பதனாலும் அதன் விசேடவுரையாலும் உணர்க. சாதிலிங்கம் - மலையிலுண்டாகும் பொருள்களுள் ஒன்று. இப்பாட்டின் முன்னிரண்டடிகளும், களவழிநாற்பது, எ: "அஞ்சனக் குன்றேய்க்கும் யானை யமருழக்கி, யிங்குலி கக்குன்றே போற்றோன்றும்" என்பதும் ஒத்து விளங்குதல்காண்க. 'வந்தமகன் புண்ணிற்குருதியுகுந்தோறும் சாதிலிங்கம்சோரும் வரையை யொப்பான்' என்றதனால், இச்செய்யுள், புண்ணொடு வருதலென்னும் துறையாயிற்று. (கூ)

போர்க்களத்தொழிதல் :—

27. படைக்கோடா விறன்மறவரைக்
கடைக்கொண்டு களத்தொழிந்தன்று.

இ - ள். படைக்கு ஓடா விறல் மறவரை - பகைவருடைய ஆயுதத்திற்குப் புறங்கொடாத வெற்றியினையுடைய வீரரை, கடைக்கொண்டு - கூட்டி, களத்து ஒழிந்தன்று - ஒரு வீரன்றான் பூசற்களரியிலே பட்டது. எ - று.

(கு - பு.) போர்க்களத்து ஒழிதல் - போர்க்களத்திலே இறத்தல்.

வ - று. உரைப்பி னதுவியப்போ வொன்னார்கைக் கொண்ட
நிரைப்பி னெடுந்தகை சென்றான் - புரைப்பின்
றுளப்பட்ட வாயெல்லா மொள்வாள் கவரக்
களப்பட்டான் றோன்றான் கரந்து.

இ - ள். நெடு தகை - பெரிய மேம்பாட்டினையுடையவன், ஒன்னூர் கைக்கொண்ட - பகைவரைப்பற்றின, நிரை பின் சென்றான் - நிரையின்பின்னே சென்றான், (சென்றவன்) புரைப்பு இன்று - ஒப்பின்றி, உளப்பட்ட வாய் எல்லாம் - கருதப்பட்ட உடம்பிடமெல்லாம், ஒள் வாள் கவர - ஒள்ளிய வாட்படையானது கொள்ளைகொள்ள, களம் பட்டான் - போர்க்களரியிலேவிழுந்தான், கரந்து தோன்றான் - ஒளித்துத்தோற்றுகிலன்; உரைப்பின் அது வியப்போ - சொல்லுவேமாயின் அஃது அதிசயமோ. எ - று.

(கு - பு.) ஒன்னுமை - பகைமை. புரை - உவமவுருபு. இன்று - வினையெச்சமுற்று. களரி - போர்க்களம். 'உளப்பட்ட வாயெல்லாம் ஒள்வாள்கவரக் களப்பட்டான்' என்றதனால், இது, போர்க்களத்தொழிதலாயிற்று. (சு)

## ஆளெறிபிள்ளை :—

28. வருவாரை யெதிர்விலக்கி
யொருதானாகி யாளெறிந்தன்று.

இ - ள். வருவாரை - வந்து பொருவாரை, எதிர் விலக்கி - எதிரேதடுத்து, ஒருதானாகி - தான் ஒருவனுமேயாகி, ஆள் எறிந்தன்று - (ஒருவீரன்) வீரரைவெட்டியது. எ - று.

(கு - பு.) ஆள் எறி பிள்ளை - பகைவராகிய வீரரை வெட்டுகின்ற பிள்ளைத்தன்மையையுடையவனது செயலைக் கூறுவது; பிள்ளை - பிராயத்தாற்சிறியவன்.

வ - று. பிள்ளை கடுப்பப் பிணம்பிறங்கவாளெறிந்து
கொள்ளைகொ ளாயந் தலைக்கொண்டா - ரெள்ளிப்
பொருதழிந்து மீளவும் பூங்கழலான் மீளா
னொருதனியே நின்றா னுளன்.

இ - ள். கொள்ளை கொள் ஆயம் தலைக்கொண்டார் - (வெட்சியார்) கொள்ளைகொண்ட பசுநிரையைக் கிட்டினவர்கள், எள்ளி பொருது அழிந்து மீளவும் - (அவரை) இகழ்ந்து பூசற்செய்து கெட்டு மீண்டுபோகவும், மீளான் - மீளானாகி, பிணம் பிறங்க ஆள் எறிந்து - பிணம் பெருக்கும்படி வீரரைவெட்டி, பிள்ளை கடுப்ப - விளைவையறியாத பிள்ளையையொப்ப, தனியே நின்றான் ஒரு பூங்கழலான் உளன் - தனியேநின்றவனான ஒருபூங்கழலான் உளன்.

(கு - பு.) 'ஆளெறிந்து மீளான் ஒருதனியே நின்றானுளன்' என்றதனால், இச்செய்யுள், ஆளெறிபிள்ளையாயிற்று. (எ)

## பிள்ளைத்தெளிவு:—

29. கண்மகிழ்ந்து துடிவிம்மப்
புண்மகிழ்ந்து புகன்றாடின்று.

இ - ள். துடி கண் மகிழ்ந்து விம்ம - துடியின் கண் மகிழ்ந்து ஒலிப்ப, புண் மகிழ்ந்து - தன்புண்ணைமகிழ்ந்து, புகன்று ஆடின்று - விரும்பிக்கூத்தாடியது. எ - று.

அதனைப்புகழ்ந்து ஆடிய்தூஉமாம்.

(கு - பு.) பிள்ளை தெளிவு-பிள்ளைத்தன்மையையுடையவனது துணிவு.

வ - று. மேவா ருயிருணங்க மேன்முடித்த பிள்ளையன்
பூவா ளுறைகழியாப் போர்க்களத்து - ளோவான்
றுடியிரட்டி விம்மத் தொடுகழலார் முன்னின்
றடியிரட்டித் திட்டாடு மாட்டு.

இ - ள். தொடு கழலார் முன் நின்று-கட்டிய வீரக்கழலையுடையார்முன்னே நின்று, துடி இரட்டி விம்ம - துடிகொட்டி ஆர்ப்பரவம்மிக, அடி இரட்டித்து இட்டு - இட்டஅடியின் மேலே அடியிட்டு, பூ வாள் உறை கழியா - பொலிவினையுடையவாளினை உறையினின்றும் வாங்கி, போர் களத்துள் - பூசற்களரியிலே, ஆடும் ஆட்டு - ஆடும் கூத்தினை, மேவார் உயிர் உணங்க - பகைவருடைய உயிர் உலர, மேல் முடித்த பிள்ளையன் - தலையைப்போக்கிக் கவந்தமாக்கிநின்ற பிள்ளைத்தன்மையையுடையவன், ஓவான் - ஒழியான்.

(கு - பு.) மேலென்றது, தலையை. கவந்தம்-தலைபோனவுடம்பு. 'மேல் முடித்தபிள்ளையன், போர்க்களத்துள் தொடுகழலார்முன்னின்று ஆடல் ஓவான்' என்றதனால், இச்செய்யுள், பிள்ளைத்தெளிவாயிற்று. (அ)

## பிள்ளையாட்டு :—

30. கூடலர்குடர் மாலைசூட்டி
வேறிரித்து விரும்பியாடின்று.

இ - ள். கூடலர் குடர் மாலை சூட்டி - பகைவருடைய குடராகிய மாலையைச்சூட்டி, வேல் திரித்து - கையிலே வேலைத்திருப்பி, விரும்பி ஆடின்று - விருப்பமுற்று ஆடியது. எ - று.

(கு - பு.) பிள்ளை ஆட்டு - பிள்ளைத்தன்மையை உடையவனது ஆடல்.

வ - று. மாட்டிய பிள்ளை மறவர் நிறந்திறந்து
கூட்டிய வெஃகங் குடர்மாலை - சூட்டியபின்
மாறிரியச் சீறி நுடங்குவான் கைக்கொண்ட
வேறிரிய விம்முந் துடி.

இ - ள். மாட்டிய பிள்ளை - பகைவரைமாளப்பண்ணின பிள்ளைத்தன்மையை யெய்தியவன், மறவர் நிறம் திறந்து-வீரருடைய மார்பகங்களைத்திறந்து, கூட்டிய எஃகம் - தெரிந்துபறித்தவேலுக்கு, குடர் மாலை சூட்டியபின் - பகைவருடைய குடர்மாலையைச் சுற்றியபின்பு,மாறு இரிய - மாறுபாடுகெட, சீறி நுடங்குவான் - கோபித்துஆடுகின்றவன், கைக்கொண்ட வேல் திரிய - கைக்கொண்டவேலைத் திருப்ப, துடி விம்மும் - துடியானது ஒலியாநின்றது.

(கு - பு.) 'பிள்ளை.........நுடங்குவான்' என்றுவந்தமையின், இச்செய்யுள், பிள்ளையாட்டாயிற்று. (கூ)

## கையறுநிலை:—

31. வெருவரும் வாளமர் விளிந்தோற் கண்டு
கருவி மாக்கள் கையற வுரைத்தன்று.

இ - ள். வெருவரும் வாள் அமர் - அஞ்சத்தரும் வாட்பூசலிலே, விளிந்தோன் கண்டு - பட்டோனைப்பார்த்து, கருவிமாக்கள் - யாழ்ப்பாணர், கை அறவு உரைத்தன்று - அவன்பட்ட படியைச்சொல்லியது. எ - று.

(கு - பு.) கருவி - யாழ். கைஅறவு - செயலறுதல். கருவிமாக்கள் தம்முடைய செயலறவைச்சொல்லியதென்று பொருள்கொள்ளுதலும் பொருந்தும்.

வ - று. நாப்புலவர் சொன்மாலை நண்ணார் படையுழக்கித்
தாப்புலி யொப்பத் தலைக்கொண்டான் - பூப்புனையு
நற்குலத்துட் டோன்றிய நல்லிசையாழ்த் தொல்புலவீர்
கற்கொலோ சோர்ந்திலவெங் கண்.

இ - ள். பூ புனையும் நல் குலத்துள் தோன்றிய - பொற்றாமரைப்பூவைச்சூடும் நல்லகுலத்திலேபிறந்த, நல் இசை யாழ் தொல் புலவீர் - நல்ல இசையினையுடைய யாழாற்சிறந்த பழைய அறிவினையுடையீர், நா புலவர் சொல் மாலை - செந்நாப்புலவருடைய சொன்மாலையையுடையவன், நண்ணார் படை - பகைவருடையசேனையை, தா புலி ஒப்ப உழக்கி தலைக்கொண்டான் - வலிய புலியையொப்பத் துகைத்துப்பட்டான்; (அதனைக்கண்டும்) எம் கண் சோர்ந்தில - எம்முடையகண்கள் விழுந்தில; (ஆதலால்அவை) கற்கொலோ - கல்லோ (அறியேம்.) எ - று.

(கு - பு.) பாணர் பொற்றாமரைப்பூப்பரிசுபெறுதற்கு உரியரென்பதை, புறநானூறு, கஉ: "பாணர் தாமரை மலையவும்", எனவும், கூஉ: "நீயவற் கண்ட பின்றைப் பூவி, லாடும்வண் டிமிராத் தாமரை, சூடா யாத லதனினு மிலையே" எனவும் வந்துள்ளவற்றாலறிக. அவை - அக்கண்கள். 'புலவருடைய சொன்மாலையையுடையதலைவன் தலைக்கொண்டான், அதனைக் கண்டும், எம்முடையகண்கள் சோர்ந்தில; ஆதலால், அவை கற்கொலோ' என்றமையால், இச்செய்யுள், கையறுநிலையாயிற்று. (௩௦)

## நெடுமொழிகூறல்:—

32. மன்மேம் பட்ட மதிக்குடை யோற்குத்
தன்மேம் பாடு தானெடுத் துரைத்தன்று.

இ - ள். மன் மேம்பட்ட - மன்னரில் மேம்பட்ட, மதி குடையோற்கு - நிறைமதிபோலும் கொற்றக்குடையினையுடையோனுக்கு, தன் மேம்பாடு தான் எடுத்து உரைத்தன்று - (ஒருவீரன்) தன்மேம்பாட்டைத் தான் உயர்த்திச்சொல்லியது. எ - று.

(கு - பு.) "தனதுமேம் பாடு ரைத்த ருனெடு மொழியென் ருமே" என்பது சூடாமணிநிகண்டு.'

வ - று. ஆளமர் வெள்ளம் பெருகி னதுவிலக்கி
வாளொடு வைகுவேன் யானாக - நாளுங்
கழிமகிழ் வென்றிக் கழல்வெய்யோ யீயப்
பிழிமகி ழுண்பார் பிறர்.

இ - ள். நாளும் கழி மகிழ் வென்றி - நாடோறும் மிக்க உவகையாற் சிறந்த வெற்றியினையும், கழல் வெய்யோய் - வீரக்கழலினையுமுடைய வெய்யோனே, ஆள் அமர் வெள்ளம் பெருகின் - வீரராகிய போர்ப்பிரளயம் கைவளரின்,யான்—,அது விலக்கி - அதனைவிலக்கி, வாளொடு வைகுவேனாக - வாளுடனே அங்குத் தங்குவேனாக,ஈய-நீகொடுப்ப,பிழி மகிழ் உண்பார் பிறர்-பிழியுமதுவை நுகர்வார் வேறுசிலர். எ - று.

(கு - பு.) 'பிழிமதுவுண்பார்பிறர்'என்றும் பாடம். "தானால் விலங்காற் றனித்தாற் பிறன்வரைத்தால், யானை யெறிதல் இளிவரவால் - யானை, யொருகை யுடைய தெறிவலோ யானு, மிருகை சுமந்துவாழ் வேன்"(தொல். புறத். ௫. சூ. ௨௨-ம்) என்னும் வெண்பாவாலும் இத்துறைப்பொருள் விளங்கற்பாலது. 'ஆளமர்வெள்ளத்தை விலக்கி யான் வாளொடுவைகுவேன்; பிறர்பிழி மகிழுண்பார்' என்றமையால், இச்செய்யுள், நெடுமொழிகூறலாயிற்று. (௩௧)

## பிள்ளைப்பெயர்ச்சி:—

33. போர்தாங்கிப் புள்விலங்கியோனைத்
தார்வேந்தன் றலையளித்தன்று.

இ - ள். புள் விலங்கி போர் தாங்கியோனை - புள்ளைவிலக்கிப் பூசலைத் தாங்கினவனை, தார் வேந்தன் - மாலையினையுடைய மன்னன், தலையளித்தன்று - தண்ணளிசெய்தது. எ - று.

கு - பு. பிள்ளை பெயர்ச்சி - ஒருவீரன் காரிப்புள் விலக்குதலை மதியாதுசென்று போர்செய்தலைக்கூறுவது. பிள்ளை - கரிக்குருவி; பெயர்ச்சி - பெயர்த்தல். ஒருவீரனைப் பிள்ளைத்தன்மையினின்றும் பெயர்த்துக்கூறுவது பிள்ளைப்பெயர்ச்சியென்று சொல்லுவதுமுண்டு; அஃது இங்கேபொருந்தாது

வ - று. பிணங்கமருட் பிள்ளை பெயர்ப்பப் பெயரா
தணங்கஞர்செய் தாளெறிதந் நோக்கி - வணங்காச்
சிலையளித்த தோளான் சினவிடலைக் கன்றே
தலையளித்தான் றண்ணடையுந் தந்து.

இ - ள். வணங்கா சிலை அளித்த தோளான்-வளையாத மலையினையொத்த தோளான், பிணங்கு அமருள் - மாறுபடும் பூசலிடத்து, பிள்ளை பெயர்ப்ப பெயராது-காரியென்னும்புள்விலக்கவும் விலங்கானாகி,அணங்கு அஞர்செய்து-(பகைவர்) வருந்துதற்குக்காரணமாகிய துன்பத்தைச்செய்து, ஆள் எறிதல்

நோக்கி - வீரனைவெட்டுதலைப்பார்த்து, சினம் விடலைக்கு - கோபத்தினையு டையவீரனுக்கு, அன்றே - அற்றைநாளே, தணணடையும் தந்து தலையளித்தான் - மருதநிலம்பலவும்கொடுத்து வரிசைகொடுத்தான். எ - று.

(கு - பு.) அளித்த - உவமவுருபு. ஒருவீரன் பிள்ளைபெயர்ப்பப்பெயராது அஞர்செய்து ஆளெறிதல் கூறப்பட்டமையின், இச்செய்யுள், பிள்ளைப்பெயர்ச்சியாயிற்று. (௩௨)

## வேத்தியன்மலிபு :—

34. தோள்வலிய வயவேந்தனை
வாள்வலிமறவர் சிறப்புரைத்தன்று.

இ - ள. வாள் வலி மறவர் - வாளால் வலிய வீரர், தோள் வலிய வயம் வேந்தனை - தோளால்வலிய மறமன்னனது, சிறப்பு உரைத்தன்று - மேம்பாட்டினைச் சொல்லியது. எ - று.

(கு - பு.) வேந்து இயல் மலிபு - அரசனது இயல்பின் மிகுதியைக் கூறுவது.

வ - று. அங்கையு ணெல்லி யதன்பய மாதலாற்
கொங்கலர் தாரான் குடைநிழற்கீழ்த் - தங்கிச்
செயிர்வழங்கும் வாளமருட் சென்றடையார் வேல்வா
யுயிர்வழங்கும் வாழ்க்கை யுறும்.

இ - ள். கொங்கு அலர் தாரான் - தேன்மலரும் மாலையினையுடையானது, குடை நிழல் கீழ் தங்கி - கொற்றக்குடையின் நிழலின்கீழே தங்கி, செயிர் வழங்கும் வாள் அமருள் சென்று - கோபத்தினைக்கொடுக்கும் வாட்பூசலிலே புகுந்து, அடையார் வேல் வாய் - பகைவர்தம் வேலின்வாயிலே, உயிர் வழங்கும் வாழ்க்கை - உயிரைக்கொடுக்கும் செல்வம், அங்கையுள் நெல்லியதன் பயம் ஆதலால் - உள்ளங்கை நெல்லிப்பழத்தினது தன்மையாதலால், உறும் - மிகவும் உறுதியுடைத்து. எ - று.

செல்வம், நெல்லியதன் பயமாதலால், உறுதியுடைத்தெனக.

(கு - பு.) 'அரசனுடைய குடைநிழலில் தங்கிப் பகைவருடைய வேலின் வாயிலே உயிரைக்கொடுக்கும்செல்வம் உறுதியுடைத்து' என்றமையின், இச்செய்யுள், வேத்தியன்மலிபாயிற்று. (௩௩)

## குடிநிலை :—

35. மண்டிணி ஞாலத்துத் தொன்மையு மறனுங்
கொண்டுபிற ரறியுங் குடிவர வுரைத்தன்று.

இ - ள். மண் திணி ஞாலத்து - அணுக்கள்செறிந்த பூமியிடத்து, தொன்மையும் மறனும் கொண்டு - பழமையையும் தறுகண்மையையுமுட்கொண்டு, பிறர் அறியும் குடி வரவு உரைத்தன்று - பிறரறியும் குடியின் வரலாற்றினைச் சொல்லியது. எ - று.

(கு - பு.) குடிநிலை - குலத்தின் பழமையைக் கூறுவது.

வ - று. பொய்யகல நாளும் புகழ்விளைத்த லென்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர் - கையகலக்
கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி.

இ - ள். வையகம் போர்த்த - பூமியை மறைத்த, வயங்கு ஒலி நீர் கையகல - தெளிந்து விளங்கும் ஒலியையுடைய யுகாந்த வெள்ளம் விட்டுநீங்க, கல் தோன்றி மண் தோன்றா காலத்தே - முற்பட மலைதோன்றிப் பூமிதோன்றாத அளவிலே, வாளோடு - வாட்படையுடனே, முன் தோன்றி - எல்லாரிலும் முற்பட மலையிடத்திலே தோன்றி, மூத்த குடி - பழையதாகியகுடி, பொய் அகல - பொய்ம்மைநீங்க, நாளும் - நாள்தோறும், புகழ் விளைத்தல் என் வியப்பு ஆம் - கீர்த்தியை உண்டாக்குதல் என்ன அதிசயமாகும். எ - று.

குடி புகழ்விளைத்தல் என்வியப்பாமென்க.

எவனென்பது என்னெனக் குறைந்துநின்றது. 'மூத்தகுடி' என்றதற்குப் பூசலிலே வாளாலேபட்டகுடி என்பாருமுளர்,

(கு - பு.) புறநானூறு, ௨௬௦: "இவற்கீத் துண்மதி கள்ளே சினப்போர், இனக்களிற் றியானை யியறேர்க் குரிசி, லுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை, யெடுத்தெறி ஞாட்பி னிமையான் றச்ச, வடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே, மறப்புகழ் நிறைந்த மைந்தினோ னிவனு, முறைப்புழி யோலை போல, மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே" என்பதனாலும் இத்துறை விளங்க உணரற்பாலது. 'கற்றோன்றிமண்டோன்றாக் காலத்தே... தோன்றி மூத்தகுடி' என்றமையின், இச்செய்யுள், குடிநிலையாயிற்று. (௧௪)

கரந்தைத்திணைப்பாட்டு ஒன்றும் துறைப்பாட்டுப் பதின்மூன்றும் முடிந்தன.

(கு - பு.) கரந்தைத்திணைப்பாட்டு ஒன்று, "அழுங்கனீர் வையகத்து" என்பது. துறைப்பாட்டுப் பதின்மூன்று, "காலார்கழலார்" என்பது முதலியன.

இரண்டாவது

கரந்தைப்படலம் முற்றிற்று.

---

மூன்றாவது

# வஞ்சிப் படலம்.

வாடா வஞ்சி வஞ்சி யரவங்
கூடார்ப் பிணிக்குங் குடைநிலை வாணிலை
கொற்றவை நிலையே கொற்ற வஞ்சி
குற்றமில் சிறப்பிற் கொற்ற வள்ளை
பேராண் வஞ்சி மாராய வஞ்சி
நெடுமொழி வஞ்சி முதுமொழி வஞ்சி
யுழபுல வஞ்சி மழபுல வஞ்சி
கொடையின் வஞ்சி குறுவஞ் சியியே
யொருதனி நிலையொடு தழிஞ்சி பாசறை
பெருவஞ் சியியே பெருஞ்சோற்று நிலையொடு
நல்லிசை வஞ்சியென நாட்டினர் தொகுத்த
வெஞ்சாச் சீர்த்தி யிருபத் தொன்றும்
வஞ்சியும் வஞ்சித் துறையு மாகும்.

என்னின், வஞ்சித்திணையும் துறைகளுமாமாறு உணர்த்துதனுதலிற்று.

இ-ள். வஞ்சி, வஞ்சியரவம், குடைநிலை, வாணிலை, கொற்றவைநிலை, கொற்றவஞ்சி, கொற்றவள்ளை, பேராண்வஞ்சி, மாராயவஞ்சி, நெடுமொழி வஞ்சி, முதுமொழிவஞ்சி, உழபுலவஞ்சி, மழபுலவஞ்சி, கொடைவஞ்சி, குறு வஞ்சி, ஒருதனிநிலை, தழிஞ்சி, பாசறைவஞ்சி, பெருவஞ்சி, பெருஞ்சோற்று நிலை, நல்லிசைவஞ்சியெனத் தொகுக்கப்பட்ட இவை இருபத்தொன்றும் வஞ்சித்திணையும் அதன் துறைகளுமாம். எ-று.

(கு-பு.) கூடார் - பகைவர். நாட்டினர் - வினையெச்சமுற்று. எஞ்சாமை - குறையாமை. மேற்கூறியவற்றுள், 'வாடாவஞ்சி' என்றது, வஞ்சித்திணையை. 'வஞ்சியரவம்' முதலியன வஞ்சித்துறைகள்.

## வஞ்சி:—

36. வாடாவஞ்சி தலைமலைந்து
கூடார்மண் கொளல்குறித்தன்று.

இ-ள். வாடாவஞ்சி - தோலாத வஞ்சிப்பூவை, தலை மலைந்து - தலையிலேசூடி, கூடார் மண் கொளல் குறித்தன்று - பகைவருடைய பூமியைக் கொள்ளுதலைக் கருதியது. எ-று.

(கு - பு.) வஞ்சி - பகைவர்மேற் போர்செய்தற்குச்செல்லும் ஒழுக்கம்; இதற்கு வஞ்சிப்பூச்சூடுதலும் உரித்து; "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி, வாய் வா ளெனேந்தகை மணிமுடிக் கணிந்து" (சிலப். உசு - ம் கா. ௰ - ௰க.) என் பதனுமுணர்க.

வ - று. செங்கண் மழவிடையிற் றண்டிச் சிலைமறவர்
வெங்கண் மகிழ்ந்து விழவமர - வங்குழைய
வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக்
குஞ்சி மலைந்தானெங் கோ.

இ - ள். சிலைமறவர் - வில்லினையுடைய வீரர், செம் கண் மழ விடையின் - சிவந்த கண்ணினையுடைய இளமைப்பருவத்து ஆனேற்றையொப்ப, தண்டி - மிகைத்தெழுந்து, வெம் கள் மகிழ்ந்து - வெவ்விய மதுவை அருந்தி, விழவு அமர - வில்விழாவை விரும்பும்படி, எம் கோ - எம்முடைய வேந்து, வணங்கார் வணக்கிய - தன்னைப்பணியாதாரைப் பணிவிக்கவேண்டி, அம் குழைய வஞ்சி - அழகிய தளிரினையுடைய வஞ்சிப்பூவை, வண்டு ஆர்ப்ப - சுரு ம்பு ஆரவாரிக்க, குஞ்சி மலைந்தான் - குடுமியிலேசூடினன். எ - று.

(கு - பு.) 'எங்கோ, பகைவரை வணக்கவேண்டி வஞ்சியைக் குஞ்சியில் மலைந்தான்' என்றதனால், இச்செய்யுள், வஞ்சித்திணையாயிற்று. (க)

வஞ்சியரவம்:—

37. வள்வார் முரசமொடு வயக்களிறு முழங்க
வொள்வாட் டானை யுருத்தெழுந் தன்று.

இ - ள். வள் வார் முரசமொடு - வலியினையுடைய வாரால்விசித்த வீரமுரசுடனே, வயம் களிறு முழங்க - வலிய யானை ஒலிப்ப, ஒள் வாள் தானை - அழகியவாளினையுடைய சேனையானது, உருத்து எழுந்தன்று - கோபித்து எழுந்தது. எ - று.

(கு - பு.) வஞ்சி அரவம் - வஞ்சிமாலையைச்சூடிப் பகைமேற்செல்பவர்க ளின்முழக்கம்.

வ - று. பௌவம் பணைமுழங்கப் பற்றார்மண் பாழாக
வௌவிய வஞ்சி வலம்புனையச் - செவ்வே
லொளிறும் படைநடுவ ணூழித்தீ யன்ன
களிறுங் களித்ததிருங் கார்.

இ - ள். பற்றார் மண் பாழாக - பகைவருடையநிலம் அழியும்படி, வௌவிய வஞ்சி வலம் புனைய - கைப்பற்றின வஞ்சியை வெற்றியாகத் (தலை வன்) சூடவே, செம் வேல் ஒளிறும் படை நடுவண் - சிவந்தவேல் விட்டுவிள ங்கும் சேனைநடுவே, பணை பௌவம் முழங்க - வீரமுரசம் கடல்போல ஆர வாரிப்ப, ஊழி தீ அன்ன களிறும் - யுகாந்தத்து நெருப்பையொத்த யானை களும், கார் களித்து அதிரும்-மேகத்தைப்போல மகிழ்ந்து முழங்காநின்றன. எ - று.

உம்மை - சிறப்பும்மை.

(கு - பு.) 'தலைவின் வஞ்சிப்பூவைப்புனையவே பணைமுழங்க,யானை மேக ம்போல அதிரும்' என்றமையால், இச்செய்யுள், வஞ்சியரவமாயிற்று. (உ)

## குடைநிலை :—

38. பெய்தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புலவர் புகழ்பாடக்
சொய்தார் மன்னவன் குடைநாட் கொண்டன்று.

இ - ள். கொய் தார் மன்னவன் - கத்தரிகையால் மட்டஞ்செய்த மாலையினையுடையவேந்தன், பெய் தாமம் சுரும்பு இமிர - தன்மேலிட்டமாலையிலே வண்டுகள் ஒலிப்ப, பெரு புலவர் புகழ் பாட - மிக்க அறிவினையுடையோர் கீர்த்தியைச்சொல்ல, குடை நாட்கொண்டன்று - குடையை நல்லநாளிற் புறவீடுவிட்டது. எ - று.

(கு - பு.) குடைநிலை - கொற்றக்குடையின் இயல்பு; அஃதாவது அரசன் நல்லநாளில் கொற்றக்குடையைப் புறத்தே விடுத்தல். புறவீடுவிட்டது - புறத்தே விடுத்தலைச்செய்தது.

வ - று. முன்னர் முரசிரங்க மூரிக் கடற்றானைத்
துன்னருந் துப்பிற் றொழுதெழா - மன்ன
ருடைநா ளுலந்தனவா லோதநீர் வேலிக்
குடைநா ளிறைவன் கொள.

இ - ள். இறைவன் - அரசனானவன், முன்னர் முரசு இரங்க - தன் முன்னே வீரமுரசு முழங்காநிற்க, குடை நாள் கொள - குடையை நல்லநாளிற் புறவீடுவிடுதலால், ஓதம் நீர் வேலி - திரைமிகுந்தகடலை வேலியாகவுடைய பூமியிடத்து, மூரி கடல் தானை - பெரிய கடல்போன்ற சேனையினையும், துன்னரு துப்பின் - கிட்டுதற்கரிய வலியினையும் உடையராய், தொழுது எழா மன்னர் உடை நாள் - பணிந்தெழாத வேந்தர்களுடைய வாழ்நாட்கள், உலந்தன - கெட்டன. எ - று.

புறவீடுவிட உடைநாள் உலந்தனவென்க.

ஆல் - அசை.

(கு - பு.) 'இறைவன் குடைநாட்கொளப் பகைவருடைய வாழ்நாட்கள் கெட்டன' என்றமையின், இச்செய்யுள், குடைநிலையாயிற்று. (௩)

## வாணிலை :—

39. செற்றார்மேற் செலவமர்ந்து
கொற்றவா ணாட்கொண்டன்று.

இ - ள். செற்றார் மேல் செலவு அமர்ந்து - பகைவர்மேல் எடுத்துவிடுதலைவிரும்பி, கொற்றம் வாள் நாட்கொண்டன்று - வெற்றியினையுடைய வாளைப் புறவீடுவிட்டது. எ - று.

(கு - பு.) வாள் நிலை - வாளின் இயல்பு; அஃதாவது கொற்றவாளை நல்லநாளிலே புறத்தேவிடுத்தல்.

வ - று. அறிந்தவ ராய்ந்தநா ளாழித்தேர் மன்ன
னெறிந்திலகொள்வா ளியக்க - மறிந்திகலிப்
பின்பகலே யன்றியும் பேணா ரகநாட்டு
நன்பகலுங் கூகை நகும்.

இ - ள். அறிந்தவர் ஆய்ந்த நாள் - சோதிடநூல்வல்லவர் தெரிந்தநாளிலே, ஆழி தேர் மன்னன் - வட்டக்காலாற்சிறந்த தேரினையுடைய அரசன், எறிந்து இலகு ஒள் வாள் இயக்கம் - வெட்டிவிளங்கும் அழகிய வாளினது புறவீட்டை, அறிந்து - உணர்ந்து, பின்பகல் அன்றியும் - உச்சிக்குப்பின்பு அன்றியும், பேணார் அகம் நாட்டு - பகைவருடைய உண்ணாட்டிடத்து, இகலி - மாறுபட்டு, நன்பகலும் கூகை நகும் - உச்சிப்பொழுதும் கோட்டான் பாடாநிற்கும். எ - று.

(கு - பு) வட்டக்கால் - உருளை. குடையையும் வாளையும் நல்லநாளிற் புறத்தேவிடுத்தலை இப்படியே, "செருவெங் காதலிற் றிருமா வளவன், வாளுங் குடையு மயிர்க்கண் முரசு, நாளொடு பெயர்த்து நண்ணார்ப் பெறுகவிம், மண்ணக மருங்கினென் வலிகெழு தோளெனப், புண்ணியத் திசைமுகம் போக்கிய வந்நாள்" (சிலப். ரு-ம் காதை, கூ0 - கூச.) என முன்னோர்கூறியிருத்தல்காண்க. 'ஒள்வாளியக்கம்' என்றதனால், இச்செய்யுள், வாணிலையாயிற்று. (ச)

## கொற்றவை நிலை :—

40. நீடோளான் வென்றிகொள்கென நிறைமண்டை வலனுயரிக் கூடாரைட புறங்காணுங் கொற்றவைநிலை யுரைத்தன்று.

இ - ள். நீள் தோளான் - நீண்டதோளினையுடையவன், வென்றி கொள்க என - வெற்றிபெறுவானாகவெனச்சொல்லி, நிறை மண்டை வலன் உயரி - நல்லபொருள்களால் நிரம்பிய பாத்திரத்தை வெற்றியாக எடுத்து, கூடாரை புறம் காணும கொற்றவைநிலை - பகைவரை முதுகுகாணும் துர்க்காதேவியது நிலையை, உரைத்தன்று - சொல்லியது. எ - று.

(கு - பு.) கொற்றவைநிலை - துர்க்கையின்நிலைமையைக்கூறுவது. மண்டை - உண்கலம்

வ - று. அணங்குடை நோலை பொரிபுழுக்கல் பிண்டி
்ணங்குடர் நெய்த்தோர் நிறைத்துக் - கணம்புகலக்
கைபிரீஇ மண்டை கணமோடி காவலற்கு
மொய்பிரியத் தான்முந் துறும்.

இ - ள். கணம் மோடி - பூதகணங்களையுடைய துர்க்காதேவி, மண்டை - பாத்திரத்தை, அணங்கு உடை நோலை - தெய்வத்திற்கான எள்ளுரு

ண்டையும், பொரி புழுக்கல் பிண்டி - நெற்பொரியும் அவரைதுவரை முதலி யவற்றைப் புழுக்கியவையும் மாவும், நிணம் குடர் செய்த்தோர் - நிணமும் குடரும் உதிரமுமாகிய இவற்றால், நிறைத்து - நிறைவித்து, கணம் புகல - கூட்டங்கள்விரும்ப, கை இரீஇ - அப்பாத்திரத்தைக் கையிலேயிருத்தி, மொய் இரிய - பகை கெட, காவலற்கு தான் முந்துறும் - வேந்தனுக்குத் தான் முன்னே எழுந்தருளுவாள், எ - று.

(கு - பு.) நோலைமுதலியன காவலன் நிவேதித்தன. 'மோடி, மண்டையை நோலைமுதலியவற்றால் நிறைவித்து அதனைக் கையில்வைத்து அரசனுக்குமுன்னே செல்லுவாள்' என்றதனால், இச்செய்யுள், கொற்றவைநிலையாயிற்று. (௬)

## இதுவுமது:—

41\. மைந்துடை யாடவர் செய்தொழில் கூறலு
மந்தமில் புலவ ரதுவென மொழிப

இ - ள். மைந்து உடை ஆடவர் செய்தொழில் கூறலும் - வலியினையுடைய வீரர்செய்யும் தொழிலைச்சொல்லுதலும், அந்தம் இல் புலவர் - முடிவில்லாத அறிவினையுடையோர், அது என மொழிப-அத்துறையென்று சொல்லுவர், எ - று.

வ று. தமருட் டலையாத றார்தாங்கி நிற்ற
லெமருள்யா மின்னமென் றெண்ண - லமரின்
முடுகழலின் முந்துறுதன் முல்லைத்தார் வேந்தன்
றொடுகழன் மைந்தர் தொழில்.

இ - ள். தமருள் தலையாதல் - தம்முடைய சுற்றத்தாரின் மேலாகுதல், தார் தாங்கி நிற்றல் - தூசிப்படையைத் தடுத்துநிற்றல், எமருள் யாம் இன்னம் என்று எண்ணல் - எங்கள் படைவீரருள் யாம் இன்னதன்மையையுடையேமென்று எண்ணுதல், அமரில் - போரில், முடுகு அழலில் முந்துறுதல் - விரைந்துசெல்லும் நெருப்புப்போலே முற்படப்புகுதல்; ஆகிய இவைகள், முல்லை தார் வேந்தன்-முல்லைமாலையையணிந்த மன்னனுடைய, தொடு கழல் மைந்தர் தொழில் - கட்டும் வீரக்கழலையணிந்த வீரர்களுடைய செய்கைகளாகும். எ - று.

(கு - பு.) 'தமருட்டலையாதல்' முதலிய வீரர்களுடைய செயல்கள் துர்க்கையின் அருளால் உண்டாவனவாதலின், அவற்றைக்கூறுதலும் கொற்றவைநிலையாயிற்று. (௭)

## கொற்றவஞ்சி:—

42\. வையகம் வணங்க வாளோச் சினனெனச்
செய்கழல் வேந்தன் சீர்மிகுத் தன்று.

இ-ள். செய் கழல் வேந்தன் - பண்ணின வீரக்கழலினையுடைய அரசன், வையகம் வணங்க - உலகத்துள்ளாரெல்லாரும் தொழ, வாள் ஓச்சினன் என - வாளாலே பகைவரை வெட்டினனென்று, சீர் மிகுத்தன்று - அவனது நன்மையைப் பெருகச்சொல்லியது. எ-று.

(கு-பு.) கொற்றம் - வெற்றி.

வ-று. அழலடைந்த மன்றத் தலந்தயரா நின்றார்
நிழலடைந்தே நின்னையென் றேத்திக் - கழலடையச்
செற்றங்கொண் டாடிச் சிலைத்தெழுந்தார் வீந்தவியக்
கொற்றங்கொண் டெஃகுயர்த்தான் கோ.

இ-ள். கோ - அரசனானவன், அழல் அடைந்த மன்றத்து - நெருப்புப்பொருந்திய (பகைவர்நாட்டு) அம்பலத்தில், அலந்து அயராநின்றார் - நொந்து அழியாநின்றவர், நின்னை நிழல் அடைந்தேம் என்று ஏத்தி கழல் அடைய - நின்னை நிழலாகச்சேர்ந்தேமென்று புகழ்ந்து பாதத்தைஅடையவும், செற்றங் கொண்டாடி - சினத்தைப்பாராட்டி, சிலைத்து எழுந்தார் வீந்து அவிய - கோபித்துவந்தார் பட்டுத் தம்பெயர் கெடவும், கொற்றம் கொண்டு - வெற்றியைப்பெற்று, எஃகு உயர்த்தான் - வேலை வலமாக உயர்த்தான். எ-று.

(கு-பு. அம்பலம் - பொதுவானஇடம். 'கொற்றங்கொண் டெஃகுயர்த்தான்' என்றதனால், இச்செய்யுள், கொற்றவஞ்சியாயிற்று. (எ)

## கொற்றவள்ளை:—

43. மன்னவன் புகழ்கிளந்
தொன்னார்நாட் டழிபிரங்கின்று.

இ-ள். மன்னவன் புகழ் கிளந்து - அரசனுடைய கீர்த்தியைச்சொல்லி, ஒன்னார் நாடு அழிபு இரங்கின்று - பகைவருடைய தேசங்கெடுவதற்கு வருந்தியது. எ-று.

(கு-பு.) கொற்றம் வள்ளை - தலைவனது வெற்றியாலுண்டாகிய புகழைக் கூறும் உரற்பாட்டு; இஃது உலக்கைப்பாட்டெனவும் வழங்கும்; கொற்றம்-வெற்றி; வள்ளை - உரற்பாட்டு; "மனையளகு, வள்ளைக் குறங்கும் வளநாட" (திருவள்ளுவமாலை, ௬) என்பதனாலுணர்க. இப்பாட்டு, சிலப்பதிகாரம், வாழ்த்துக்காதையில் உள்ளது. கொற்றவள்ளையென்பதற்குத் தோற்ற கொற்றவன்கொடுக்கும் திறையென்று பொருள்கூறுவதுமுண்டு. இத்துறையின் கருத்தை, புறநானூறு, ௪, எ, ௪௧ - ம் பாட்டுக்களால் நன்கு அறியப்படும்.

வ-று. தாழாத மார்பினான் றாமரைக்கண் சேர்ந்தனவாற்
பாழாய்ப் பரிய விளிவதுகொல் - யாழாய்ப்

புடைதேதே னிமிர்கண்ணிப் பூங்கட் புதல்வர்
நடைத்தே ரொலிகறங்கு நாடு.

இ - ள். ஆரம் தாழ் மார்பினன் - ஆரந்தாழ்ந்த மார்பினையுடையவனது, தாமரை அன்ன சேந்தன - தாமரைமலர்போன்ற கண்கள் சிவந்தன; (ஆதலால்) யாழாய் - யாழையொப்ப, புடை தேன் இமிர் கண்ணி - பக்கத்தே வண்டுகள் ஒலிக்கும் மாலையினையும், பூ கண் புதல்வர் - பொலிவு பொருந்திய கண்ணினையுமுடைய மைந்தர்களது, நடை தேர் ஒலி கறங்கும் நாடு - சிறுதேரின்ஓசை ஆரவாரிக்கும் நாடானது, பரிய பாழாய் விளிவது கொல் - கண்டார் இரங்கப் பாழ்பட்டுக் கெடும்போலும். எ - று.

நாடு பரிய விளிவதுகொலென்க.

(கு - பு.) யாழாய், ஆய் - ஆக. பகைவர்நாடு அழிதலைக்குறித்து இரங்கிக் கூறினமையின், இச்செய்யுள், கொற்றவள்ளையாயிற்று. (௮)

## பேராண்வஞ்சி :—

44. கேளல்லார் முனைகெடுத்த
மீளியாளர்க்கு மிகவுய்த்தன்று.

இ - ள். கேள் அல்லார் முனை கெடுத்த - உறவல்லாதார் போரும்செருவைத் தொலைத்த, மீளியாளர்க்கு மிக உய்த்தன்று - தலைமையையுடைய வீரர்களுக்குப்பெரிதும் கொடுத்தது. எ - று.

(கு - பு.) பேராண்வஞ்சி - பெரிய ஆண்மையையுடைய படைவீரர்க்கு உபசரித்தலைக்கூறுவது.

வ - று. பலிபெறு நன்னகரும் பள்ளி யிடனும்
மொலிகெழு நான்மறையோ ரில்லு - நலிவொரீஇப்
புல்லா ரிரியப் பொருதார் முனைகெடுத்த
வில்லார்க் கருள்சுரந்தான் வேந்து.

இ - ள். வேந்து - மன்னவன், பலி பெறும் நல் நகரும் - தெய்வங்கள் பலிகளைப்பெறும் நல்லகோயில்களும், பள்ளி இடனும் - துறந்தாரிருக்கும் பள்ளியிடங்களும், ஒலி கெழு நான்மறையோர் இல்லும் - ஓசைபொருந்திய நான்குவேதத்தோருடைய அகமும் ஆகிய இவற்றை, நலிவு ஒரீஇ - நெருக்குதலையொழிந்து, புல்லார் இரிய - பகைவர்கெட்டோட, பொருதார் முனை கெடுத்த - பொருதவீரர்களுடைய போரை வென்ற, வில்லார்க்கு அருள் சுரந்தான் - தன்னுடைய வில்லாளர்க்கு உபகாரம்பண்ணினன். எ - று.

(கு - பு.) 'பொருதார்..........வேந்து' என்றதனால், இச்செய்யுள், பேராண்வஞ்சியாயிற்று. (௯)



இதுவுமது:—

45. அருந்திறை யளப்ப வாறிய சினத்தொடு
பெரும்பூண் மன்னவன் பெயர்தலு மதுவே.

இ - ள். அரு திறை அளப்ப - பெறுதற்கரிய பொருளைப் பகைவர்கொடுப்ப, ஆறிய சினத்தொடு - தணிந்தகோபத்துடனே, பெரு பூண மன்னவன் - பேரணிகலங்களையுடைய அரசன், பெயர்தலும் அது - மீண்டுபோதலும் அத்துறையாம். எ - று.

வ - று. கூடி முரசிரங்கக் கொய்யுளைமா முன்னுகளப்
பாடி பெயர்ந்திட்டான் பல்வேலான் - கோடி.
நிதியந் திறையளந்தார் நேராருந் தன்கீழ்
முதியமென் றுறி முரண்.

இ - ள். நேரார் - பகைவர்கள், தன் கீழ் முதியம் என்று - நின்அடிக்கீழ்ப்பழையோமென்றுசொல்லி, கோடி நிதியம் திறை அளந்தார் - கோடி அளவாகிய பொருளைத் திறையாக இவனுக்குக்கொடுத்தார்; பல் வேலானும் - பலவேற்படையினையுடைய அரசனும், முரசு கூடி இரங்க - முரசு பலவாச்சியத்தோடும் பொருந்தி அதிரவும், கொய் உளை மா முன் உகள - கைக்கத்தரிகையிட்டு நறுக்கின தலையாட்டத்தினையுடைய குதிரைகள் முன்னே சதியாகநடக்கவும், முரண் ஆறி - மாறுபாடொழிந்து, பாடி பெயர்ந்திட்டான் - பாசறையினைவிட்டுப் பெயர்ந்தான். எ - று.

உம்மையை மாறுக.

(கு - பு.) தலையாட்டம - குதிரைப்பிடரிமயிர். சதி-தாளவொற்று. 'நேரார் திறையளந்தார் பல்வேலான் பாடிபெயர்ந்திட்டான்' என்று வந்தமையால, இச்செய்யுளும் பேராண்வஞ்சியாயிற்று. (௪௦)

மாராயவஞ்சி—:

46. மறவேந்தனிற் சிறப்பெய்திய
விறல்வேலோர் நிலையுரைத்தன்று.

இ - ள். மறம் வேந்தனின் சிறப்பு எய்திய - மாற்சரியத்தினையுடைய மன்னனாலே சிறப்புப்பெற்ற, விறல் வேலோர் - வெற்றிமிக்க வேலினையுடையோரது, நிலை உரைத்தன்று - நிலைமையைச்சொல்லியது. எ - று.

(கு - பு.) மாராயம் - சிறப்பு; "மாராயம்பெற்ற நெடுமொழி" என்பது, தொல். புறத்.௬அ.

வ - று. நேரார் அம் பூண்ட செறிந்தகை நேர்கழலான்
சேரார முனைநோக்கிக் கண்சிவப்ப - போரார

நறவேய் கமழ்தெரிய னண்ணா ரெறிந்த
மறவே லிலைமுகந்த மார்பு.

இ - ள். நெடு தகை சேர் கழலான் - பெரியமேம்பாட்டினையும் பொருந்திய வீரக்கழலையுமுடையான், செரார் முனை நோக்கி கண் சிவப்ப - பகைவருடைய போரைப்பார்த்துக் கோபித்துக் கண்கள்சிவக்க, நறவு ஏய் கமழ் தெரியல் நண்ணார் எறிந்த - தேன்மேவிய நாறுமாலையினையுடைய பகைவர்கள் எறிந்த, மறம் இலை வேல் முகந்த போரார் மார்பு - மாற்சரியத்தான் மிக்க இலைத்தொழிலையுடைய வேலை ஏற்றுக்கொண்ட போர்வீரர்களுடைய மார்புகள், நேர் ஆரம் பூண்ட - இணைமொத்த முத்தாரங்களை அணிந்தன. எ-று.

மறவேலிலைமுகந்த போரார்மார்பு நேராரம்பூண்டனவென்க. இனி, நேராரம்பூண்ட போரார்மார்பு மறவேலிலைமுகந்தனவென்றலுமொன்று.

(கு - பு.) 'பகைவரெறிந்த வேலையேற்றுக்கொண்ட வீரர்மார்புகள் ஆரம்பூண்ட' என்றதனால், இச்செய்யுள், மாராயவஞ்சியாயிற்று. (௧௧)

## நெடுமொழிவஞ்சி:—

47. ஒன்னாதார் படைகெழுமித்
தன்னாண்மை யெடுத்துரைத்தன்று.

இ - ள். ஒன்னாதார் படை செழுமி - பகைவருடைய சேனையைக் கிட்டி, தன் ஆண்மை எடுத்து உரைத்தன்று - (ஒருவீரன்) தன்னுடைய ஆண்மைத்தன்மையை உயர்த்திச்சொல்லியது. எ - று.

(கு - பு.) நெடுமொழி - ஒருவீரன் தன் ஆண்மைத்தன்மையை எடுத்துக்கூறுவது.

வ - று. இன்ன ரெனவேண்டா வென்னோ டெதிர்சீறி
முன்னர் வருக முரணகனு - மன்னர்
பருந்தார் படையமருட் பல்லார் புகழ
விருந்தா யடைகுறுவார் விண்.

இ - ள். முரண் அகலும் மன்னர் - மாறுபாடுமிகும் வேந்தர்கள், இன்னர் என வேண்டா - இன்னதன்மையாரென்று சொல்லவேண்டா; பருந்து ஆர் படை அமருள் - பருந்துநிறையும் படைக்கலையுடைய போரிடத்து, என்னோடு எதிர் சீறி முன்னர் வருக - என்னுடனேகோபித்து என்முன்னேபோரவருக; (அங்ஙனம்வரின், அவர்கள்), பல்லார் புகழ - பலருமபோற்ற, விண் விருந்தாய் அடைகுறுவார் - வீரசுவர்க்கத்திற்குப் புதியராய் அதனை அடைவார்கள். எ - று.

(கு - பு.) 'யாரேனும் எதிர்வருக; வரின், அவர் விண் அடைகுறுவர்' என்று ஒருவீரன் கூறியதாகவந்தமையின், இச்செய்யுள், நெடுமொழிவஞ்சியாயிற்று.

## முதுமொழிவஞ்சி:—

48. தொன்மரபின் வாட்குடியின்
முன்னோனது நிலைகிளந்தன்று.

இ - ள். தொல் மரபின் வாள் குடியில் - பழையவரலாற்றினையும் வாளினையுமுடைய மறக்குடியில், முன்னோனது நிலை கிளந்தன்று - தந்தையது நிலைமையைச் சொல்லியது. எ - று.

வ - று. குளிறு முரசங் குணில்பாயக் கூடா
ரொளிறுவாள் வெள்ள முழக்கிக் - களிறெறிந்து
புண்ணொடு வந்தான் புதல்வற்குப் பூங்கழலோய்
தண்ணடை நல்க றகும்.

இ - ள். பூ கழலோய் - பொலிந்த வீரக்கழலினையுடையோய், குளிறும் முரசம் குணில் பாய - முழங்கும் வீரமுரசிலே குறுந்தடிதாக்க, கூடார் ஒளிறு வாள் வெள்ளம் உழக்கி - பகைவருடைய விட்டுவிளங்கும் வாள்வெள்ளத்தைத் துகைத்து, களிறு எறிந்து - யானையைவெட்டி, புண்ணொடு வந்தான் புதல்வற்கு - புண்ணுடனேவந்தவனுடைய மகனுக்கு, தண்ணடை நல்கல் தகும் - மருதநிலங்களைக்கொடுத்தல் தக்கதாம். எ - று.

'புதல்வற்கு நல்கல்தகும்' என்றமையால், அவன் தகப்பன் பட்டமைவிளங்கும்.

(கு - பு.) 'புண்ணொடுவந்தான் புதல்வற்குத் தண்ணடைநல்கல்தகும்' என்றுவந்தமையின், இச்செய்யுள், முதுமொழிவஞ்சியாயிற்று. (கரு)

## உழபுலவஞ்சி:—

49. நேராதார் வளநாட்டைக்
கூரெரி கொளீஇயன்று.

இ - ள். நேராதார் வளம் நாட்டை - பொருந்தாருடைய நல்ல தேசத்தை, கூர் எரி கொளீஇயன்று - மிக்கநெருப்பாற் கொளுத்தியது. எ - று.

(கு - பு.) உழபுலம் - வருந்துமிடம்; உழத்தல் - வருந்துதல். உழபுலவஞ்சியாவது பகைவர்நாடு வருந்துதலைக்கூறுவது.

வ - று. அயிலன்ன கண்புதைத் தஞ்சி யலறி
மயிலன்னார் மன்றம் படரக் - குயிலகவ
வாடிரிய வண்டிமிருஞ் செம்ம லடையார்நாட்
டோடெரியுள் வைகின வூர்.

இ - ள். குயில் அகவ - குயில்பாட, ஆள் திரிய - ஆள் உலாவ, வண்டு இமிரும் செம்மல் - வண்டுகள் ஒலிக்குந்தலைமையினையுடைய, அடையார் நாட்டு ஊர் - பகைவர்தேசத்து ஊர்கள், மயில் அன்னார் - மயிலையொத்த குல

மகளிர், அயில் அன்ன கண் புதைத்து - வேலையொத்தகண்களைப் பொத்திக்கொண்டு, அஞ்சி - பயப்பட்டு, அலறி - கூப்பிட்டு, மன்றம் படர - பொதுவிடமென்றுபாராதே மன்றிற்செல்லும்படி, ஓடு எரியுள் வைகின - பரந்தோடும் நெருப்பினுள்ளே தங்கின. எ - று.

(கு - பு.) குலமகளிர் பொதுவிடத்திற்செல்லுதல் முறையன்று. 'பகைவரூர்கள் ஓடெரியுள் வைகின' என்றமையின், இச்செய்யுள், உழபுலவஞ்சியாயிற்று. (கச)

## மழபுலவஞ்சி:—

50. கூடார்முனை கொள்ளைசாற்றி
வீடறக்கவர்ந்த வினைமொழிந்தன்று.

இ - ள். கூடார் முனை - பகைவருடைய வேற்றுப்புலத்தை, கொள்ளை சாற்றி - கொள்ளையூட்டி, வீடு அற கவர்ந்த - வீடுகள்பாழ்படக் கொள்ளை கொண்ட, வினை மொழிந்தன்று - தொழிலைச்சொல்லியது. எ - று.

(கு - பு.) மழபுலம் - இளைய இடம்; பகைவரிடம். அது புதிதாக இவராற் கைப்பற்றப்பட்டமையின், இப்பெயர்பெற்றது. புறநானூற்றில் எ, கசு-ம் செய்யுட்களாலும் அவற்றின் உரைகளாலும் இத்துறையின் அமைதி நன்குபுலப்படும்.

வ - று. களமர் கதிர்மணி காலேகஞ் செம்பொன்
வளமனை பாழாக வாரிக் - கொளன்மலிந்து
கண்ணார் சிலையார் கவர்ந்தார் கழல்வேந்த
னண்ணார் கிளையலற நாடு.

இ - ள். கண் ஆர் சிலையார் - கண்ணுக்குநிறைந்தவில்லாளர், கழல் வேந்தன் நண்ணார் கிளை அலற - வீரக்கழலினையுடைய அரசன்றன் பகைவர் சுற்றம் இரங்கும்படி, வளம் மனை பாழ் ஆக - அழகியவீடுகளெல்லாம் வறியனவாகும்படி, களமர் - அடியாரையும், கதிர் மணி - ஒளிவிடும் வைரஅரதனங்களையும், காலேகம் - முத்தினையும், செம் பொன் - சிவந்தபொன்னினையும், வாரி - திரட்டி, கொளல் மலிந்து - கைப்பற்றிக்கொள்ளும்வகைமிக்கு, நாடு கவர்ந்தார் - அவர்நாட்டைக்கவர்ந்தார். எ - று.

(கு- பு.) 'பகைவருடைய நாட்டைக் கவர்ந்தார்' என்றமையின், இச்செய்யுள், மழபுலவஞ்சியாயிற்று. (கரு)

## கொடைவஞ்சி:—

51. நீடவுங் குறுகவு நிவப்பவுந் தூக்கிப்
பாடிய புலவர்க்குப் பரிசி னீட்டின்று.

இ - ள். நீடவும் குறுகவும் - உச்சமாகவும் மந்தமாகவும், நிவப்பவும் - அதன்மேற் சமமாகவும், தூக்கி பாடிய புலவர்க்கு - இசையை அளந்து பாடின அறிஞர்க்கு, பரிசில் நீட்டின்று - பரிசிலைக்கொடுத்தது. எ - று.

செந்தூக்குமுதலான எழுவகைத்தூக்கினுளுந் தூக்கியென்றுமாம். ஈண்டு நிவப்பவென்றது மந்தத்திலேஓங்கிய சமத்தை; "ஒருசீர் செந்தூக் கிருசீர் மதலை, முச்சீர் கோயி னாற்சீர் துணிவே,, யைஞ்சீர் நிவப்பே யறுசீர் தழாஅ, லெழுசீர் தானெடுந் தூக்கென மொழிப" என்றார்.

(கு - பு.) கொடை - கொடுத்தல்.

வ - று. சுற்றிய சுற்ற முடன்மயங்கித் தம்வயி
றெற்றி மடவா ரிரிந்தோட - முற்றிக்
குரிசி லடையாரைக் கொண்டகூட் டெல்லாம்
பரிசின் முகந்தன பாண்.

இ - ள். சுற்றிய சுற்றம் - தம்மைச் சூழ்ந்த பெருங்கிளைகள், உடன் மயங்கி - ஒக்கக்கலங்கும்படி, தம் வயிறு எற்றி - தத்தம்வயிற்றிலே அடித்துக்கொண்டு, மடவார் இரிந்து ஓட - மகளிர்கெட்டோடும்படி, குரிசில் - தலைவனானவன், முற்றி - பகைவர்நாட்டைவளைத்து, அடையாரை கொண்ட கூட்டு எல்லாம் - சத்துருக்கள்பாற் பறித்துக்கொண்ட பொருள்முழுவதையும், பரிசில் முகந்தன பாண் - தாம்பெறும்பேறாக முகந்துகொண்டன பாண்கிளைகள். எ - று.

மயங்கி - மயங்க.

(கு - பு.) 'கூட்டு - பொருளாதலை, "கொங்கலர்தார் மன்னருங் கூட்டளப்ப" என இந்நூலிற் 'பின்வருவதனாலும் உணர்க; அ - வாகைப்படலம், 'உக. 'கூட்டெல்லாம் பரிசின்முகந்தனபாண்' என்றமையின், இச்செய்யுள், கொடைவஞ்சியாயிற்று. (கக)

## குறுவஞ்சி:—

52. மடுத்தெழுந்த மறவேந்தர்க்குக்
கொடுத்தளித்துக் குடியோம்பின்று.

இ - ள். மடுத்து எழுந்த - மண்டியெதிர்ந்த, மறம் வேந்தர்க்கு கொடுத்து - வீரத்தையுடையமன்னர்க்குத் திறையைக் கொடுத்து, குடி அளித்து ஓம்பின்று - (நாடுடைய அரசன்), குடிக்குத் தண்ணளிபண்ணிக்காத்தது.

(கு - பு.) பகைவர்க்குக்கொடுத்து அவர்பகைமையைப் போக்கிக்கொள்வதாதலின், இது குறுவஞ்சியாயிற்று; பகைவர்க்குக்கொடுப்பது வீரர்க்குச்சிறப்பன்று.

வ - று. தாட்டாழ் தடக்கைத் தனிமதி வெண்குடையான்
வாட்டானை வெள்ளம் வரவஞ்சி - மீட்டான்
மலையா மறமன்னன் மால்வரையே போலுங்
கொலையானை பாய்மாக் கொடுத்து.

இ - ள். தாள் தாழ் தட கை - தாளிலே தாழநீண்ட பெரியகையினையும், தனி மதி வெண்குடையான் - ஒப்பில்லாத மதியினையொத்த வெண் கொற்றக்குடையினையுமுடைய பகையரசனது, வாள் தானை வெள்ளம் வர அஞ்சி - வாளினையுடைய சேனையாகியவெள்ளம் தன்நாட்டில் வருதற்குப் பயந்து, மலையா மறம் மன்னன் - எதிர்க்கமாட்டாத வீரத்தையுடையவேந்தன், மால் வரை போலும் கொலை யானை பாய்மா-பெரிய மலையினை ஒக்கும் கொலையானையினையும் சதிபாயுங் குதிரையினையும், கொடுத்து - திறையாகக் கொடுத்து, மீட்டான் - அச்சேனைவெள்ளத்தை விலக்கினான். எ - று.

(கு - பு.) 'பகைவர்க்குக்கொடுத்து அவர் சேனையைமீட்டான்' என்று வந்தமையின், இச்செய்யுள், குறுவஞ்சியாயிற்று. (௫௭)

## இதுவுமது:—

53. கட்டூரது வகைகூறினு
மத்துறைக் குரித்தாகும்.

இ - ள். கட்டூரது வகை கூறினும் - தங்கியிருக்கும் பாசறையினது கூறுபாட்டைச் சொல்லினும், அ துறைக்கு உரித்து ஆகும் - முற்பட்ட குறு வஞ்சிக்கு உரிமையுடையதாகும். எ - று.

(கு - பு) கட்டு ஊர் - புதிதாகக்கட்டிய ஊர்; என்றது பாசறையை.

வ - று. அவிழ்மலர்க் கோதைய ராட வொருபா
லிமிழ்முழவம் யாழோ டியம்பக் - கவிழ்மணிய
காய்கடா யானை யொருபாற் களித்ததிரு
மாய்கழலான் கட்டூ ரகத்து.

இ - ள். ஆய் கழலான் கட்டூர் அகத்து - மேலாக நல்லோர்தெரிந்த வீரக்கழலினையுடையான் விட்டிருந்த பாசறையிடத்து, ஒருபால் - ஒருபக்கத்திலே, இமிழ் முழவம் - முழங்காநின்ற மத்தளம், யாழோடு இயம்ப - யாழுடனே ஆரவாரிப்ப, அவிழ் மலர் கோதையர் ஆட - மலர்ந்தபூவாற் சிறந்த மாலையினையுடைய மகளிர் கூத்தாடாநிற்க, ஒருபால்—, கவிழ் மணிய - பக்கத்திலேகவிழ்ந்த மணியினையுடைய, காய் கடா யானை - சிறப்பட்ட மதத்தினையுடையயானை, களித்து அதிரும் - மகிழ்ந்து முழங்கும். எ - று.

(கு - பு. விட்டிருந்த - தங்கியிருந்த. பாசறை - படைவீடு. இதிற் கட்டூரின் இயல்பு கூறப்பட்டிருத்தல்காண்க. (௫௮)

## ஒருதனிநிலை:—

54. பொருபடையுட் கற்சிறைபோன்
றொருவன்றாங்கிய நிலையுரைத்தன்று.

இ - ள். பொரு படையுள் - போரினைச்செய்யும் சேனையிடத்து, கல் சிறை போன்று - வெள்ளம்தள்ளாதபடி கல்லாற்கட்டின அணையை ஒத்து,

ஒருவன் தாங்கிய நிலை உரைத்தன்று - ஒருவீரன் தடுத்தநிலையைச் சொல்லியது." எ - று

(கு - பு.) கற்சிறை - கல்லணை; "வருவிசைப்புனலைக் கற்சிறைபோல, வொருவன்றாங்கிய பெருமை" (புறத். அ.) எனத். தொல்காப்பியத்தும், "வருபுனற் கற்சிறை கடுப்ப விடையறுத், தொன்னு ரோட்டிய செருப்புகன் மறவர்" என மதுரைக்காஞ்சியிலும் இவ்வுவமை கூறப்பட்டுள்ளது.

வ - று. வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமா லிந்நின்ற
வாடன் முதியாள் வயிற்றிடம் - கூடார்
பெரும்படை வெள்ள நெரிதரவும் பேரா
விரும்புலி சேர்ந்த விடம்.

இ - ள். இ நின்ற வாடல் முதியாள் - இவ்விடத்துநின்ற பொலிவழிந்ததன்மையினையுடைய கிழவியினது, வயிறு இடம் - மடியிடமானது, கூடார் பெரு படை வெள்ளம் - பகைவருடைய அளவிறந்தசேனைவெள்ளமானது, நெரிதரவும் - நெருங்கிவந்துமேலிடவும், பேரா - நின்றநிலையினின்றும் நீங்காத, இரு புலி சேர்ந்த இடம் - பெரிய புலியையொப்பவன்கிடந்த இடமாகும்; வீடு உணர்ந்தோர்க்கும் வியப்பாம் - (இது) முத்தியினையறிந்து எல்லாப்பற்றும் அற்றோர்க்கும் அற்புதமாம். எ - று.

ஆல் - அசை.

(கு - பு.) பகைவருடைய சேனைவெள்ளம் வந்தபொழுது பெயராமல் ஒருவீரன் தனியேநின்றதைக் கூறினமையின், இச்செய்யுள், ஒருதனிநிலையாயிற்று. (ருக)

## தழிஞ்சி:—

55. அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக் -
கழிதறு கண்மை காதலித் துரைத்தன்று.

இ - ள். அழிகுநர் புறக்கொடை - தனக்குக் கெட்டோடுவாருடைய முதுகில், அயில் வாள் ஓச்சா - கூரியவாளைச் செலுத்தாத, கழி தறுகண்மை - (ஒருவீரனுடைய) மிக்க மறப்பண்பை, காதலித்து உரைத்தன்று - விரும்பிச்சொல்லியது. எ - று,

(கு - பு.) தழிஞ்சி - தழுவிக்கொள்ளுதல்.

வ - று. கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினுந்
தான்படை நீண்டாத் தறுகண்ணன் - வான்படாதல்
கண்ணியபி னன்றிக் கறுத்தார் மறந்தொலைத
லெண்ணியபின் போக்குமோ வெஃகு.

இ - ள். கான் படு தியின் - காட்டிலேதோன்றின நெருப்புப்போல, கலவார் தன் மேல் வரினும் - பகைவர் தன்னை மீதூர்ந்துவந்தாலும், படை

நீண்டா தறுகண்ணனன்றான் - ஆயுதந்தொடாத வீரனென்றான், கறுத்தார் வான் படர்தல் கண்ணியபின் அன்றி - பகைவர் சுவர்க்கலோகத்தேபோதலைக்கருதி எதிரினல்லது, மறம் தொலைதல் எண்ணிய பின்பு-முதுகிடுதல் கருதியபின்பு, எஃகுஒழுக்குமோ - வாளினை ஓச்சுவனோ. எ - று.

(கு - பு) ஒக்குமோ, ஓ - எதிர்மறை. "பேராண்மை யென்ப தறுக ணொன் றுற்றக்கா, லூராண்மை மற்றத னெஃகு" என்னும் திருக்குறளும், 'ஊராண்மை - உபகாரியாந்தன்மை; அஃதாவது இலங்கையர்வேந்தன் போரிடைத் தன்றானைமுழுதும்படத் தமியனாயகப்பட்டானது நிலைமைநோக்கி, அயோத்தியரிறை மேற்செல்லாது இன்றுபோய் நாளை நின்றானையோடுவா வென விட்டாற்போல்வது' என்னும் அதன் விசேடவுரையும் இங்கே அறியற்பாலன; 'கறுத்தார் மறந்தொலைத லெண்ணியபின்போக்குமோ வெஃகு' என்றுவந்தமையின், இச்செய்யுள், தழிஞ்சியாயிற்று. (உ0)

## பாசறை

56. மதிக்குடைக்கீழ் வழிமொழிந்து மன்னரெல்லா மறந்து
பதிப்பெயரான் மறவேந்தன் பாசறை யிருந்தன்று. [றப்பவும்

இ - ள். மதி குடை கீழ் - நிறைமதிபோன்ற கொற்றக்குடையின்கீழே, மன்னர் எல்லாம் வழிமொழிந்து - வேந்தர்பலரும் தாழ்வுசொல்லி, மறம் துறப்பவும் - மாற்சரியத்தை விடவும், மறம் வேந்தன் - மறத்தினையுடைய மன்னன், பதி பெயரான் - அவ்விடத்தினின்றும் போகானாகி, பாசறை இருந்தன்று - பாடிவீட்டிலேயிருந்தது. எ - று.

(கு - பு.) பாசறை நிலை - படைவீட்டிலே தலைவன் இருத்தல்.

வ - று. கரும்பொடு காய்நெற் கனையெரி யூட்டிப்
பெரும்புனல் வாய்திறந்த பின்னுஞ் - சுரும்பின்
றொகைமலிந்த தண்குவளைத் தூமலர்த் தாரான்
பகைமெலியப் பாசறையு ளான்.

இ - ள். சுரும்பின் தொகை மலிந்த - வண்டின்கூட்டம் மிக்க, தண் குவளை தூ மலர் தாரான் - குளிர்ந்த செங்கழுநீர்ப்பூவாற்செய்த தூய்மையான மாலையினையுடையோன், பகை மெலிய - சத்துருக்கள்பொலிவழியும்படி, கரும்பொடு காய் நெல் - கரும்பினையும் காய்த்தநெல்லினையும், கனை எரி ஊட்டி - முழங்கும் நெருப்பு உண்ணப்பண்ணுவித்து, பெரு புனல் வாய் திறந்த பின்னும் - பெரியநீர்நிலைகள் பலவற்றை உடைத்தபின்னும், பாசறை உளான் - தான்தங்கியபடைவீட்டிலே இருந்தான். எ - று.

(கு - பு.) 'பகைவருடைய நாட்டிலுள்ள கரும்புமுதலியவற்றை எரித்து நீர்நிலைகளை உடைத்தபின்னரும் அரசன் பாசறையிலிருந்தான்' என்றமையின், இச்செய்யுள், பாசறைநிலையாயிற்று.

## பெருவஞ்சி :—

57\. முன்னடையார் வளநாட்டைப்
பின்னரும்உடன் றெரிகொளீஇயன்று

இ - ள். முன் அடையார் 'வளம் நாட்டை - தன்னுடையமுன்னேவந்து செறியாத பகைவர்களுடைய நல்லதேசத்தை, பின்னரும் உடன்று - பின்பும் கோபித்து, எரி கொளீஇயன்று - நெருப்பாற் கொளுத்தியது. எ-று.

வ - று. பீடுலா மன்னர் நடுங்கப் பெரும்புகை
யூடுலாய் வானத் தொளிமறைப்ப - நாடெலாம்
பின்னும் பிறங்கழல் வேய்ந்தன பெய்கழற்கான்
மன்னன் கனல மறம்.

இ - ள். கால் பெய் கழல் மன்னன் - காலிலேயிட்ட வீரக்கழலிணையுடைய அரசனது, மறம் கனல - சினம் மூள்கையாலே, நாடு எலாம் - (பகைவருடைய) தேயமுழுவதும், பீடு உலாம் மன்னர் நடுங்க - பெருமைபரந்த மன்னர்கள் துளங்கும்படி, பெரு புகை - பெரிய தூமமானது, ஊடு உலாய் - நடுவேயுலாவி, வானத்து ஒளி மறைப்ப - ஆகாயத்தின்கண் விளக்கத்தினை மறைப்ப, பின்னும் பிறங்கு அழல் வேய்ந்தன - இரண்டாவதும் மிக்க நெருப்பால் மூடப்பட்டன. எ - று.

(கு-பு.) 'இப்படலத்தில் "அயிலன்னகண்புதைத்து" என்னும் கச - ம் செய்யுளில், பகைவருடைய ஊர்களைத் தீக்கொளுவுதல் கூறப்பட்டமையின், இங்கே, 'பின்னும் பிறங்கழல் வேய்ந்தன' என்றார். நாடெலாம் அழல் வேய்ந்தன' என்றமையின், இது, பெருவஞ்சியாயிற்று. (உஉ)

## பெருஞ்சோற்றுநிலை :—

58\. திருந்தார் தெம்முனை தெறுகுவ ரிவரெனப்
பெருஞ்சோ றுடவர் பெறுமுறை வகுத்தன்று.

இ - ள். திருந்தார் தெவ் முனை - பகைவருடைய வேற்றுப்புலத்தை, இவர் தெறுகுவர் என - இவர் அழித்துத்தருவாரென்று நினைத்து, பெரு சோறு - மிக்கசோற்றை, ஆடவர் பெறும் முறை வகுத்தன்று - வீரர்கள் கொள்ளும்வகையிலே கொடுத்தது. எ - று.

வ - று. இயவர் புகழ வெறிமுரச சார்ப்பக்
குயவரி வேங்கை யனைய - வயவர்
பெறுமுறையாற் பிண்டங்கோ ளேவினான் பேணா
ரிறுமுறையா லெண்ணி யிறை.

இ - ள். இறை - அரசனானவன், பேணார் இறும் முறை எண்ணி பகைவர்படும்வகையை விசாரித்து, இயவர் புகழ - வாச்சியக்காரர் துதிப்ப

எறிமுரசு ஆர்ப்ப - கொட்டும் வீரமுரசு முழங்க, குயம் வரி வேங்கை அனைய: அரிவாள்போன்ற வரியினையுடைய புலியையொத்த, வயவர் பெறுமுறை - வீரர்பெறுமுறைப்படி, பிண்டம் கோள் ஏவினன் - சோற்றுத்திரள் கொள்கையை ஏவினன். எ - று.

ஆல் - அசைகள்.

(கு - பு) அரசன், முரசறைவித்து, போர்செய்த வீரர்களை வருவித்து உண்பித்தல்மரபாதலின், 'எறிமுரசார்ப்ப' என்றார்; பதிற்றுப்பத்து, ௩0: "பெருஞ்சோ றுகுத்தற் கெறியுங், கடுஞ்சின வேந்தேநின் றழங்குகுரன் முரசே" என்பதனாலுமுணர்க. தொல். புறத்; அ: "பிண்ட மேய பெருஞ்சோற்று நிலை" என்பதும், 'வேந்தன் போர்தலைக்கொண்ட பிற்றைஞான்றுதானே போர்குறித்த படையாளரும்தானும் உடனுண்பான்போல்வந்து ஓர்முகமன்செய்தற்குப் பிண்டித்துவைத்த உண்டியைக் கொடுத்தன்மேயின பெருஞ்சோற்று நிலை' என்னும் அதனுரையும், புறநானூறு, ௨: "பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்", ௸ ௨௩௰: "பெருஞ்சோற் றுறு நனிபல கலத்தன் மன்னே" என்பனவும், சிலப்பதிகாரம், ௨௰-ம் காதை, ௧௪௪: "பின்றைச் சிறப்பிற் பெருஞ்சோற்று வஞ்சியும்"; ௸ ௨௬-ம் காதை, ௪௯: "பெரும் படைத் தலைவர்க்குப் பெருஞ்சோறு வகுத்து" என்பனவும் இங்கே அறியத் தக்கன. 'இறை, வயவர் பெறுமுறை பிண்டங்கோள் ஏவினன்' என்றுவந்தமையின், இச்செய்யுள், பெருஞ்சோற்றுநிலையாயிற்று. (௨௩)

## நல்லிசைவஞ்சி:—

59. ஒன்னாதார் முனைகெடவிறுத்த
வென்வேலாடவன் விறன்மிகுத்தன்று.

இ - ள். ஒன்னாதார் முனை கெட இறுத்த - பகைவருடைய வேற்றுப் புலம் அழியும்படி சென்றுதங்கின, வென் வேல் ஆடவன் - வென்றிவேலினையுடைய தலைவனது, விறல் மிகுத்தன்று - வெற்றியை மிகுத்துச்சொல்லியது. எ - று.

(கு - பு.) நல் இசை - நல்லபுகழ்; என்றது தலைவன்புகழை.

வ - று. மடங்கலிற் சீறி மலைத்தெழுந்தார் மண்மேல்
இடங்கெடச் சென்றிறுத்த பின்னு - நுடங்கெரிபோல்
வெல்லப் பெருகும் படையாற்கு வேந்தர்மேற்
செல்லப் பெருகுஞ் சினம்.

இ - ள். மடங்கலின் சீறி - சிங்கம்போற் கோபித்து, மலைத்து எழுந்தார் மண்மேல் - மாறுபட்டு எதிர்ந்தாருடைய நிலத்தின்மேலே, இடம் கெட சென்று இறுத்த பின்னும் - வெளிதூரும்படி படையெடுத்துப்போய் விட்ட பின்பும், நுடங்கு எரி போல் - அசைந்தெரியும் நெருப்புப்போல, வெல்ல பெருகும் படையாற்கு - சயிக்கவளரும் சேனையினையுடைய அரசனுக்கு,

வேந்தர் மேல் செல்ல - பகைமன்னர்மேல் எடுத்துச்செல்ல, சினம் பெருகும் - கோபம் மிகாநிற்கும். எ - று.

வென்றோர் விளக்கம் கூறியவாறு.

(கு - பு.) சிறிச்சென்றென்று இயைப்பினும்பொருந்தும். தொல்காப்பியப் புறத்திணையியலிற்கூறிய வஞ்சித்திணைக்குரிய துறைகள் பதின்மூன்றனுள் 'வென்றோர்விளக்கம்' என்பது ஒன்று; 'வென்ற அரசர்க்குஉளதாகிய விளக்கத்தைக்கூறுவது' என்பது அதன்பொருள். புறநானூற்றில், "வெளிறி ஞோன்காழ்" என்னும் உ௬ - ம் செய்யுளும், பதிற்றுப்பத்தில், "அறு அ யாணர்" என்னும் ௭௧-ம் செய்யுளும் ஈண்டு அறியற்பாலன. 'பகைவருடைய இடங்கெடச்சென்று இறுத்தபின்னும் தலைவனுக்குச் சினம்பெருகும்' என்றதனால், இச்செய்யுள், நல்லிசைவஞ்சியாயிற்று.

## இ து வு ம து :—

60\. இறுத்தபி னழிபிரங்கன்
மறுத்துரைப்பினு மத்துறையாகும்.

இ - ள். இறுத்த பின் - எடுத்துவிட்ட பின்பு, அழிபு இரங்கல் - (பகைவர்தேயத்து) அழிவைக்குறித்து இரங்குதலை, மறுத்து உரைப்பினும் - மீட்டுச்சொல்லினும், அ துறையாகும் - முன்புசொன்ன துறையேயாம். எ-று.

(கு - பு.) இப்படலத்தில், முன்பு, கொற்றவள்ளை யென்னும் துறையால், பகைவருடையநாடு அழிதற்கு இரங்குதல் ஒருவகையாகக் கூறப்பட்டமையின், 'மறுத்துரைப்பினும்' என்று ஈண்டுக்கூறினார்.

வ - று. குரையழன் மண்டிய கோடுயர் மாடஞ்
சுரையொடுபேய்ப் பீர்க்குஞ் சுமந்த-நிரைதிண்டேர்ப்
பல்லிசை வென்றிப் படைக்கடலான் சென்றிறுப்ப
நல்லிசை கொண்டடையார் நாடு.

இ - ள். நிரை திண் தேர் - ஒழுங்குபட்ட திண்ணியதேரினையும், பல் இசை வென்றி - பலகீர்த்தியாற்சிறந்த வென்றியினையும், படை கடலான் - சேனையாகிய கடலையுமுடைய தலைவன், சென்று இறுப்ப - சென்று தங்க, நல் இசை கொண்டு - நல்லபுகழைச்சொல்லிக்கொண்டு, அடையார் நாடு - இவனைக்கூடாத பகைவருடைய தேயங்களில், குரை அழல் மண்டிய - ஆரவாரமுடைய நெருப்புக்கொளுத்தின, கோடு உயர் மாடம் - மலையையொப்ப ஓங்கின மாளிகையெல்லாம், சுரையொடு பேய்ப்பீர்க்கும் சுமந்த - பேய்ச்சுரையையும் பேய்ப்பீர்க்கையு மேற்கொண்டன. எ - று.

(கு - பு.) 'தலைவன்சென்று இறுப்பப் பகைவர்நாட்டில் மாடங்கள் சுரையையும் பேய்ப்பீர்க்கையும் சுமந்தன' என்றமையால், இச்செய்யுள், நல்லிசைவஞ்சியாயிற்று. (உ௫)

நான்காவது

# காஞ்சிப்படலம்.



காஞ்சி காஞ்சி யெதிர்வே தழிஞ்சி
பெரும்படை வழக்கொடு பெருங்காஞ் சியே
வாள்செல வென்று குடையது செலவே
வஞ்சினக் காஞ்சி பூக்கோ ணிலையே
புகழ்த்தலைக் காஞ்சி தலைமா ராயந்
தலையொடு முடிதன் மறப்பெயர்க் காஞ்சி
மாற்றரும் பேய்நிலை பேய்க்காஞ் சியே
தொட்ட காஞ்சி தொடாக்காஞ் சியே
மன்னைக் காஞ்சி கட்காஞ் சியே
யாஞ்சிக் காஞ்சி மகட்பாற் காஞ்சி
முனைகடி முன்னிருப் புளப்படத் தொகைஇ
யெண்ணிய வகையா னிருபத் திரண்டுங்
கண்ணிய காஞ்சி துறையென மொழிப.

என் - னின், காஞ்சித்திணையும் அதன் துறைகளுமாமாறு உணர்த்துதலுதலிற்று.

இ - ள். காஞ்சி, காஞ்சியெதிர்வு, தழிஞ்சி, படைவழக்கு, பெருங்காஞ்சி, வாள்செலவு, குடைச்செலவு, வஞ்சினக்காஞ்சி, பூக்கோணிலை, தலைக்காஞ்சி, தலைமாராயம், தலையொடுமுடிதல், மறக்காஞ்சி, பேய்நிலை, பேய்க்காஞ்சி, தொட்டகாஞ்சி, தொடாக்காஞ்சி, மன்னைக்காஞ்சி, கட்காஞ்சி, ஆஞ்சிக்காஞ்சி, மகட்பாற்காஞ்சி, முனைகடிமுன்னிருப்பு என இவை இருபத்திரண்டும் காஞ்சித்திணையும் அதன் துறைகளுமாம். எ - று.

(கு - பு.) என்று - எண்ணிடைச்சொல். 'பூக்கோணிலை' என்றும் பாடம். தொகைஇ - சேர்ந்து. கண்ணிய - கருதிய. 'காஞ்சித் துறையென மொழிப' என்றும் பாடம்.

காஞ்சி:—

வெஞ்சின* மாற்றான் விடுதர வேந்தன்
காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று.

இ - ள். வெம் சினம் மாற்றான் விடுதர - வெவ்விய சினத்தையுடைய, வேற்றுமன்னன் வந்துவிட, வேந்தன் - அரசனானவன், காஞ்சி சூடி - காஞ்

* வேஞ்சினமென்றும் படித்தற்கிடமுண்டு.

சியென்னும் பூவை மலைந்து, கடிமனை கருதின்று - காவலிடத்தைக் காக்க நினைந்தது. எ - று.

(கு - பு.) காஞ்சி - போர்செய்தற்கு வந்த பகைவர்க்கு எதிரேசென்று தமது இடத்தைக்காத்தற்கு ஊன்றும் ஒழுக்கம்; இதற்கு அப்பூச்சூடுதலும் உரித்து; "தென்றிசை யென்றன் வஞ்சியொடு வடதிசை, நின்றெதி ரூன்றிய நீள்பெருங் காஞ்சியும்" (சிலப். உ௫ - ம் காதை, கசூ௫ - கசூசு) என்பதனாலு முணர்க. பல்வேறுவகைப்பட்ட நிலையாமையைக்கூறுவது காஞ்சித்திணையெ ன்பது தொல்காப்பியர் முதலியோர்கருத்து. வீடுபேறுநிமித்தமாகப் பல் வேறுநிலையாமையையறைந்த மதுரைக்காஞ்சியென்னுநூல் அதற்கு உதார ணமென்பர் நச்சினார்க்கினியர்.

வ - று. அருவரை பாய்ந்திறுது மென்பார்பண் டின்றிப்
பெருவரைச் சீறூர் கருதிச் - செருவெய்யோன்
காஞ்சி மலையக் கடைக்கணித்து நிற்பதோ
தோஞ்செய் மறவர் தொழில்.

இ - ள். பண்டு அரு வரை பாய்ந்து இறுதும் என்பார் - (செருமுனை யில் தாம் சாகும்படி பொருவார் இல்லாதபடியாலே) முன்பு ஏறுதற்கரிய மலை யேறிவிழுந்தாயினும் சாவேமென்றுசொல்லுவார்; செரு வெய்யோன் - போ ரில் விருப்பத்தையுடைய தலைவன், இன்று பெரு இ வரை - இக்காலத்தில் பெ ரிய இம்மலையிடத்துள்ள, சிறு ஊர் கருதி - சிறிய ஊரைக்காக்க நினைந்து, காஞ்சி மலைய - காஞ்சிப்பூவைச்சூட, (அதற்கு வேண்டிய உதவிகளைச் செய் யாமல்) தோம் செய் மறவர் தொழில் - குற்றத்தைப்பண்ணும் வீரர்களுடை யதொழில், கடைக்கணித்து நிற்பதோ - கடைக்கண்பார்வைசெய்து நிற்பது தானோ. எ - று.

ஓ - எதிர்மறை.

(கு - பு.) விரைந்து எதிரூன்றவேண்டுமென்பது கருதது. இஃது ஒரு வீரன்கூற்று. 'கடைக்கணித்துநிற்பதோ' என்றதனால், இச்செய்யுள் காஞ்சி த்திணையாயிற்று.

## காஞ்சியெதிர்வு:—

62. மேல்வரும் படைவரன் மிகவு மாற்றா
வேல்வ லாடவன் விறன்மிகுத் தன்று.

இ - ள். மேல்வரும் படைவரல் - எதிரூன்றும்சேனை மேலிடுதலை, மிக வும் ஆற்றா - மிகவும்பொறாத, வேல்வல் ஆடவன் - வேற்றொழிலில் வல்ல வீ ரனுடைய, விறல் மிகுத்தன்று - வெற்றியைமிகுத்துச்சொல்லியது. எ - று.

வ - று. மன்மேல் வருமென நோக்கான் மலர்மார்பில்
வென்வேன் முகந்தபுண் வெய்துயிர்ப்பத் - தன்வேல்

பிடிக்கலு மாற்றுப் பெருந்தகை.யேவத்
துடிக்கண் புலையன் றெறூம்.

இ - ள். மலர் மார்பின் - அகன்ற மார்பிடத்து, வென் வேல் முகந்த புண் - வெற்றிவேல்பாய்ந்து முதுகின்புறத்து உருவியபுண், வெய்து உயிர்ப்ப - வெய்தாக உயிர்த்தலால், தன் வேல் பிடிக்கலும் ஆற்று பெருந்தகை - தன்னுடையவேலைக் கையாற்பிடிக்கவுமாட்டாத பெரிய மேம்பாட்டினையுடைய தலைவன், மன் மேல்வரும் என நோக்கான் - மாற்றரசன் தன்மேலே மீதூர்ந்துவருமென்று கருதானாகி, ஏவ - சொல்ல, புலையன் துடி கண் தெறூம் - புலையன் துடியின் கண்ணைக் கொட்டாநிற்பன். எ - று.

(கு - பு) வெய்துயிர்த்தல் - வெம்மையாகக் காற்றைப் புறப்படவிடுதல்; இதனை, "கொழுவாய் விழுப்புண் குழைப்பொலியும்" (சிந்தா. பூமக. உக.) என்பதனாலும், 'அழகிய இடும்பைதரும் புண்வாய் காற்றைப் புறப்படவிடுகின்ற ஒலியையும்' என்னும் அதனுரையாலும் உணர்க. புலையன் - துடிகொட்டுதற்குரியவன். துடிகொட்டுதற்குத் தலைவன் அவனை ஏவியது, வஞ்சியாரோடு போர்செய்தற்கு விரைந்துபுறப்படவேண்டுமென்று தன்சேனைவீரர்கள் அறிந்துகொள்ளுதற்பொருட்டு. புலையன் துடிகொட்டுதலை, புறநானூறு, கஎ0: "வில்லுழு துண்மார் நாப்ப ணொல்லென, விழிபிறப் பாளன் கருங்கை சிவப்ப, வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி", ஷை உஅஎ: "துடியெறியும் புலைய" என்பனவற்றாலுமுணர்க. 'பெருந்தகை மன்மேல்வருமென நோக்கானாகி ஏவ, புலையன் துடிகொட்டாநிற்பன்' என்றதனால்,இது, காஞ்சியெதிர்வாயிற்று. (உ)

## தழிஞ்சி :—

63\. பரந்தெழுதரு படைத்தானை
வரம்பிகவாமைச் சுரங்காத்தன்று.

இ - ள். பரந்து எழுதரு படை தானை - வகைவளர்ந்து நடவாநின்ற ஆயுதத்தையுடையசேனையானது, வரம்பு இகவாமை - தங்களெல்லையிற் புகுதாதபடி, சுரம் காத்தன்று - அரியவழியிடத்தைக் காத்தது. எ - று.

(கு - பு.) தழிஞ்சி - வீரர், தங்களுக்குரிய இடங்களையும் தங்களுடைய சேனைகளையும் பகைவர்கள் கைக்கொண்டு வருத்தாவண்ணம் தழுவிக்காத்தல்.

வ - று. குலாவுஞ் சிலையார் குறும்புகொள வெஃகி
யுலாவு முழப்பொழிக வேந்தன் - கலாவு
மினவேங்கை யன்ன விகல்வெய்யோர் காவல்
புனவேய் நரலும் புழை.

இ - ள். புனம் வேய் நரலும் புழை - கொல்லையின்கண் மூங்கில்ஒலிக்குஞ்சிறுவழி, கலாவும் - தம்மிற்கலக்கும், இனம் வேங்கை அன்ன - இனத்

தாலுயர்ந்தபுலியையொத்த; இகல் வெய்யோர் காவல் - மாறச்சரியத்தை தவிரும்புவோர் காக்கும் இடமாகும்; ஆதலால், வேந்தன் - எதிர்மன்னன், குலாவும் சிலையார் - ஏறிட்டவில்லினையுடைய காஞ்சியார்தம், குறும்பு கொள வெஃகி - அரணினைக்கைக்கொள்ளவேண்டி, உலாவும் உழப்பு ஒழிக - நடக்கும் முயற்சியை ஒழிவானாக. எ - று.

'இகல்வெய்யோர்' எனத் தம்மைப் பிறர்போற் கூறினர்.

வஞ்சித்தழிஞ்சி இவ்வாறன்று.

(கு - பு.) இது சேனைவீரர்கூற்று. 'புறை இகல்வெய்யோர்காவல்' என்றும், 'பகைவேந்தன் எங்கள் அரணைக்கைக்கொள்ளும்விருப்பம்ஒழிக' என்றும் வந்தமையின், இது, தழிஞ்சியாயிற்று. (௩)

## படைவழக்கு :—

64. முத்தவிர்பூண் மறவேந்த
னொத்தவர்க்குப் படைவழங்கின்று.

இ - ள். முத்து அவிர் பூண் மறம் வேந்தன் - முத்துவிளங்கும் ஆபரணத்தையும் சினத்தையுமுடைய மன்னன், ஒத்தவர்க்கு படை வழங்கின்று - தம்மில் இனமொத்த வீரர்க்கு ஆயுதங்களைக்கொடுத்தது. எ - று.

(கு - பு.) படை வழக்கு - ஆயுதங்களைக்கொடுத்தல்.

வ - று. ஐயங் களைந்திட் டடல்வெங்கூற் றாலிப்ப
வையிலை யெஃக மவைபலவு - மொய்யிடை
யாட்கடி வெல்களிற் றண்ணல் கொடுத்தளித்தான்
வாட்குடி வன்க ணவர்க்கு.

இ - ள். மொய் இடை - பூசலிடத்து, ஆள் கடி வெல் களிறு அண்ணல் - ஆளைக்கடியும் போர்வெல்லும் யானையினையுடைய தலைவன், வாட்குடி வன்கணவர்க்கு - மறக்குடியிற்பிறந்த அஞ்சாமையையுடையவீரர்க்கு, அடல் வெம் கூற்று - கொலைத்தொழிலையுடைய வெவ்விய காலன், ஐயம் களைந்திட்டு - சந்தேகத்தையொழித்து, ஆலிப்ப - முழங்கும்படி, ஐ இலை எஃகமவை பலவும் - வியக்கத்தக்க இலைத்தொழிலான்மிக்க வேலைபலவற்றையும், கொடுத்து அளித்தான் - கொடுத்துத் தலையளிசெய்தான். எ - று.

(கு - பு.) 'வன்கணவர்க்கு அண்ணல் எஃகம்பலவும் கொடுத்தளித்தான்' என்றுவந்தமையின், இச்செய்யுள், படைவழக்காயிற்று. (௪)

## இதுவுமது:—

65. 'கொடுத்தபின்னாக் கழன்மறவ
ரெடுத்துரைப்பினு மத்துறையாகும்.

இ - ள். கொடுத்த பின்னர் - அரசன் படைவழங்கினபின்பு, கழல் மறவர் - கழலையுடையவீரர், எடுத்துரைப்பினும் - உயர்த்திச்சொல்லினும், அ துறை ஆகும் - முன்சொன்னதுறையேயாம். எ - று.

வ - று. துன்னருந் துப்பிற் றொடுகழலார் சூழ்ந்திருப்பத்
தன்னம ரொள்வாளென் கைத்தந்தான் - மன்னற்கு
மண்ணகமோ வைகின்று மாலை நெடுங்குடைக்கீழ்
விண்ணகமும் வேண்டுங்கொல் வேந்து.

இ - ள். துன் அரு துப்பின் - கிட்டுதற்கரிய வலியினையும், தொடு கழலார் - கட்டிய வீரக்கழலினையுமுடைய வீரர், சூழ்ந்து இருப்ப - தன்னைச் சுற்றியிருக்க, வேந்து - அரசனானவன், தன் அமர் ஒள் வாள் - தனக்குத் தக்க ஒள்ளியவாட்படையை, என் கை தந்தான் - என்கையிலேதந்தான்; மன்னற்கு - அவ்வரசனுக்கு, மண்ணகம் மாலை நெடு குடை கீழ் வைகின்று - பூமியிடமானது முத்தமாலையையணிந்தநெடிய கொற்றக்குடையின்கீழே தங்காநின்றது; விண்ணகமும் வேண்டுங்கொல் - அவன் சுவர்க்கலோகத்தையும் விரும்புவானோ. எ - று.

" ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து, வேந்தனும் வேந்து கெடும்"(திருக்குறள், ௮௯௯) என்பதனால், வேந்து இராச்சியமென்றுமாம். இனி, வேற்றுமன்னர்க்கு மண்ணகமோ வைகுதலில்லை; அவரை விண்ணகத்தின் கண் ஏற்றலையும் அரசன் வேண்டுங்கொலென்றுமாம். இப்பொருட்கு 'மன்னர்க்கு' என்பது பாடம்.

(கு-பு.) இஃது ஒருவீரன்கூற்று. 'அரசன் என்கையில் வாளைத்தந்தான்; விண்ணுலகத்தையும் ஆளுதற்குவிரும்புவான்போலும்' என்றுவந்தமையின், இச்செய்யுளும் படைவழக்காயிற்று. (௫)

## பெருங்காஞ்சி.

66. தாங்கு திறன்மறவர் தத்த மாற்றல்
வீங்கு பெரும்படையின் வெளிப்படுத் தன்று.

இ - ள். தாங்கு திறல் மறவர் - (எதிர்வரும்படையினைத்) தடுக்கும்வலியினையுடைய கொடுவினையாளர், தம் தம் - ஆற்றல் - தங்கள்தங்களுடைய வலியை, வீங்கு பெரு படையின் - மிக்கபெரியசேனையிடத்தே, வெளிப்படுத்தன்று - தோற்றுவித்தது. எ - று.

வ - று. வில்லார் குறும்பிடை வேறுவே றார்த்தெழுந்த
கல்லா மறவர் கணைமாரி - பொல்லா
வெருவி மறவேந்தர் வெல்களி றெல்லா
மிருவி வரைபோன்ற வின்று.

இ - ள். வில் ஆர் குறும்பிடை - விற்படைநிறைந்த அரணிடத்து, வேறு வேறு ஆர்த்து எழுந்த - பலவகையாக ஆரவாரித்துவந்த, கல்லா மறவர் - இயற்கையான மறத்தினையுடைய வீரர்களின், கணை மாரி - அம்பு மழையை, பொல்லா-பொறுவாய், வெருவி - அஞ்சி, மறம் வேந்தர் வெல் களிறு எல்லாம் - சினத்தையுடைய பகைமன்னர்களின் போரைவெல்லும்யானைகள்

பலவும், இன்று - இந்நாளில், இருவி வரை போன்ற - கதிரரிந்த இளைத்தாளினையுடைய மலைகளை ஒத்தன. எ - று.

(கு - பு. இது சேனையிலுள்ள வீரர்களின்கூற்று. விற்படை - வில்வீரர்களுடையதொகுதி. கல்லாமை - கற்றுக்கொள்ளாமை; இஃது, வீரர்களுடைய இயற்கை வீரத்தைப்புலப்படுத்திநின்றது; "கல்லாமாந்தர்" (மதுரைக்காஞ்சி, ௬௨௦), "கல்லாவிளையர்" (சிறுபாணாற்றுப்படை, ௩௩) எனப் பெரியோர் இங்ஙனம் கூறுதல்காண்க. 'பகைவேந்தர்களுடைய யானைகள் தம்முடைய அம்புமழையைப்பொருவாய் இருவிவரைபோன்ற' என்றமையின், இச்செய்யுள், பெருங்காஞ்சியாயிற்று. (௬௬)

## வாள்செலவு:—

67. அருமுனையா னறைகூவினபின்
செருமுனைமேல் வாள்சென்றன்று.

இ - ள். அரு முனையான் - வெல்லுதற்கரிய போரையுடைய வஞ்சியான், அறை கூவின பின் - போர்க்கு அழைத்தபின்பு, செரு முனை மேல் - போர்செய்கின்றபடையிடத்து, வாள் சென்றன்று - வாட்படை போனது. எ - று.

(கு - பு.) வாள்செலவு - நல்லவேளையில் வாட்படைசெல்லுதல். அறைகூவல் - பொரஅழைத்தல்.

வ - று, உணங்கு புலவறா வொன்னார் குரம்பை
நுணங்கரில் வெம்முனை நோக்கி - யணங்கிய
குந்த மலியும் புரவியான் கூடாதார்
வந்தபின் செல்கென்றான் வாள்.

இ - ள். மலியும் புரவியான் - பண்ணுதல்மிக்க குதிரையாயினையுடைய அரசன், உணங்கு புலவு அறா - உலரும்புலால் நாற்றம் ஒழியாத, ஒன்னார் குரம்பை - பகைவருடைய பாசறைக்கண், நுணங்கு அரில் - செறிந்த பிணக்கத்தையுடைய காட்டில், வெம் முனை நோக்கி - வெவ்விய பகையைப் பார்த்து, அணங்கிய குந்தம் - (பகைவரை) வருத்திய வேற்படையோடு, கூடாதார் வந்தபின் - பகைவர் அடர்ந்தபின், வாள் செல்க என்றான் - வாட்படையானது செல்கவென்று ஏவினான். - எ - று.

(கு - பு.) பண்ணுதல் - அலங்கரித்தல். குரம்பை - குடில். 'வாள் செல்க' என்று வந்தமையின், இசசெய்யுள், வாள்செலவாயிற்று. (௬௭)

## குடைச்செலவு:—

68. முதுகுடி மறவர் முன்னுறச் சூழக்
கொதியழல் வேலோன் குடைசென் றன்று.

இ - ள். முது குடி மறவர் - பழங்குடியிற்பிறந்த வீரர், முன் உற சூழ - முன்னே மிகச் சூழ்ந்துபோக, கொதி அழல் வேலோன் - கொதிக்குமம

நெருப்புப்போலும் வேலினையுடையவனது, குடை சென்றன்று - குடை சென்றது. ,எ - று.

(கு - பு.) குடை செலவு - கொற்றக்குடையினது செல்லுகை.

வ - று. தெம்முனை தேயத் திறல்விளங்கு தேர்த்தானை
வெம்முனை வெற்றி விறல்வெய்யோன் - றம்முனை
நாட்டிப் பொறிசெறித்து நண்ணார்மேற் செல்கென்று
கூட்டிநாட் கொண்டான் குடை.

இ - ள். தெவ் முனை தேய - பகைப்புலங்கெட, திறல் விளங்கு தேர் தானை - வெற்றிமிகுந்த தேராற்சிறந்த சேனையினையும், வெம் முனை வெற்றி - வெவ்விய போர்வெற்றியினையுமுடைய, விறல் வெய்யோன் - கொற்றத்தை விரும்பியோன், தம் முனை - இருபெருவேந்தர்தாம் பொரும்பூசலை, நாட்டி - இன்னநாளென்று நிச்சயித்துக்கட்டி, பொறி செறித்து - தன் இலாஞ்சனையிட்டு, நண்ணார் மேல் செல்க என்று - பகைவர்மேற்போக எனச் சொல்லி, கூட்டி - சோதிடவருடனேகூட்டி, குடை நாள் கொண்டான் குடையை நல்லநாளிலே புறவீடுவிட்டான். எ - று.

(கு - பு.) இலாஞ்சனை - அடையாளம். 'குடைநாட்கொண்டான்' எனவே, இது, குடைச்செலவாயிற்று. (அ)

## வஞ்சினக்காஞ்சி :—

69. வெஞ்சின வேந்தன் வேற்றவர்ப் பணிப்ப
வஞ்சினங் கூறிய வகைமொழிந் தன்று.

இ - ள். வெம் சினம் வேந்தன் - வெய்யகோபத்தையுடைய மன்னவன், வேற்றவர் பணிப்ப - பகைவரைத் தாழப்பண்ணவேண்டி, வஞ்சினம் கூறிய வகை - இவ்வாறு செய்வேனெனச்சொல்லிய கூறுபாட்டை, மொழிந்தன்று - சொல்லியது. எ - று.

(கு - பு.) வஞ்சினம் - சபதம்.

வ - று. இன்று பகலோ னிறவாமுன் னொன்னாரை
வென்று களங்கொள்ளா வேலுயர்ப்பி - னென்று
மரணவியப் பாயு மடையார்மு னிற்பேன்
முரணவிய முன்முன் மொழிந்து.

இ - ள். இன்று பகலோன் இறவா முன் - இற்றைநாள் ஆதித்தன் அஸ்தமிப்பதற்குமுன்பு, ஒன்னாரை வென்று - பகைவரைவென்று, களம் கொள்ளா வேல் உயர்ப்பின் - போர்க்களத்தைக்கொள்ளாத வேலை எடுப்பேனாயின், என்றும் - எந்நாளும், அரண் அவிய பாயும் அடையார்முன் - யான் இருந்த அரண்கெடத்தாக்கும் பகைவர்முன்னே, முரண் அவிய - எனது மா

றிபாடுகெட, முன்முன் மொழிந்து நிற்பேன் - முன்னேமுன்னே தாழ்ந்த வார்த்தைகளைச்சொல்லி நிற்பேனுவேன். எ - று.

(கு - பு.) போர்க்களத்தில் வீரர் சபதங்கூறுதலை, சிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், ௬௫: "தன்பான் மனையா ளயலான்றலைக் கண்டு பின்னு, மின்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலா, நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பா, ரென்பாரை யோம்பே னெனின்யானவ னாக வென்றான்" எனச் சீவகனும், வில்லி. பாரதம், கரு - ம் போர்ச்சருக்கம், ௧அ௦: "இன்றபிமன் வாளமரி லின்னுயி ரிழக்கக், கொன்றவனை நாளையுயிர் கோறல்புரி யேனேன், மன்றிலொரு சார்புற வழக்கற வுரைக்கும், புன்றொழிலர் வீழ்நரகு புக்குழலு வேனே.", ஷை ௧அ௧: "மோதமரி னென்மகன் முடித்தலை துணித்த, பாதகனை நாளெதிர் படப்பொருதி லேனேற், றூதையுட னேமொழி தகாதன பிதற்றும், பேதைமக னெய்துநெறி பெற்றுடையனுவேன்.", ௧அ௨: "சேயனைய வென்மதலை பொன்றவமர் செய்தோன், மாயமு னடர்த்துவய வாகைபுனை யேனேற், றூயர்ப்சி கண்டேனி தன்பசி தணிக்கு, நாயனைய புல்லனுறு நரகிலுறு வேனே.", ௧அ௩: "வஞ்சனையி லென்மகனை யெஞ்சமுன் மலைந்தோ, னெஞ்சமெரி யுண்ணவமர் நேர்பொருதி லேனேற், றஞ்சென வடைந்தவர் தமக்கிடர் நினைக்கு, நஞ்சனைய பாதகர் நடக்குநெறி சேர்வேன்." என அருச்சுனனும் கூறியனவாகப் பெரியோர் கூறியவாற்றாலுமுணர்க; கம்பராமாயணம், நாகபாசப்படலத்திலுள்ள, "மாற்றாவுயிரெம்பியை" என்னும் ௬௦ - ம் செய்யுள்முதலிய நான்கும் ஈண்டுக் கூறிய வஞ்சினக்காஞ்சிக்கு உதாரணங்களாதற்கு உரியவை. 'இன்று பகைவரை வெல்லாதவேலை உயர்ப்பேனுயின், பகைவர்முன்பு தாழ்ந்த வார்த்தைகளைச்சொல்லி நிற்பேனுவேன் யான்' என ஒருவீரன்கூறியதாக வந்தமையின், இச்செய்யுள், வஞ்சினக்காஞ்சியாயிற்று. (௬)

## பூக்கோணிலை :—

70. காரெதிரிய கடற்றானை
போரெதிரிய பூக்கொண்டன்று.

இ - ள். கார் எதிரிய கடல் தானை - மேகம் பொருந்திய கடல்போல ஒலிக்கும் சேனை, போர் எதிரிய - பூசலை ஏற்றுக்கொள்ளவேண்டி, பூ கொண்டன்று - (அரசன்கொடுத்த) பூவினைக்கொண்டது. எ - று.

(கு - பு.) பூ கோள் நிலை - பூவைக்கொள்ளும் இயல்பைக் கூறுவது. பூவென்றது, போருக்குரியதை; இங்கே காஞ்சிப்பூ.

வ - று. பருதிசெல் வானம் பரந்துருகி யன்ன
குருதியா றாவதுகொல் குன்றார் - கருதி
மறத்திறத்தின் மாறா மறவருங் கொண்டார்
புறத்திறுத்த வேந்திரியப் பூ.

இ - ள். மறமும் திறத்தின் மாறு - சினக்கூற்றிற்றப்பாத, மறவரும் - கொடுவினையாளரும், புறத்து இறுத்த வேந்து இரிய - தங்கள் ஊர்ப்புறத்தே வந்துசூழ்ந்த வஞ்சிமன்னன் கெட, கருதி - நினைந்து, பூ கொண்டார் - பூவினைக்கைக்கொண்டார்; (ஆதலால்) குன்று ஊர் - மலைசூழ்ந்த ஊர், பருதி செல் வானம் - ஆதித்தன்படும் அந்திவானம், உருகி பரந்து அன்ன - உருகிப்பரந்தாலொத்த, குருதி ஆறு ஆவதுகொல் - உதிரநதி ஆவதுபோலும். எ - று.

உம்மை - சிறப்பும்மை.

(கு - பு.) இது கண்டோர்கூற்று. 'மறவர் போருக்கு அடையாளமாகிய பூவைக்கொண்டார்' என்றுவந்தமையின், இச்செய்யுள், பூக்கோணிலையாயிற்று. (௪௦)

## தலைக்காஞ்சி :—

71. மைந்துயர மறங்கடந்தான்
பைந்தலைச் சிறப்புரைத்தன்று.

இ - ள். மைந்து உயர - தனதுவலி ஓங்கும்படி, மறம் கடந்தான் - பகைவருடைய மறத்தொழிலைக் கடந்தவனது, பைந்தலை சிறப்பு உரைத்தன்று - பசியதலையின் மதிப்பைச் சொல்லியது. எ - று.

வ - று. விட்டிடினென் வேந்தன் விலையிடினென் னிவ்வுலகி
னிட்டுரையி னெய்துவ வெய்திற்று - லொட்டாதார்
போர்தாங்கி மின்னும் புலவா ளுறைகழியாத்
தார்தாங்கி வீழ்ந்தான் றலை.

இ - ள். ஒட்டாதார் போர் தாங்கி - பகைவருடைய போரைத்தடுத்து, மின்னும் புல வாள் உறை கழியா - ஒளியைவிடும் புலால்நாற்றத்தையுடையவாளை உறையைவிட்டு எடுத்து, தார் தாங்கி வீழ்ந்தான் தலை - (விட்ட வஞ்சியானுடைய) தூசிப்படையைத்தடுத்துப் பட்டவனுடைய தலை, இ உலகின் - இந்தப்பூமியில், இட்டு உரையின் எய்துவ எய்திறறு - சிறப்பித்துச் சொல்லும் இசையினாற் பெறுவனவெல்லாம்பெற்றது; (ஆதலால் அத்தலையினை) வேந்தன் - அரசன், விட்டிடின் என்-போக்கிடின் என்ன, விலையிடின் என் ? (அத்தலைக்குத்தக்க) விலைகொடுக்கின் என்ன. எ - று.

(கு - பு) 'புலவு' என்பது 'புல' என்றாயது ; தொகுத்தல். விட்ட - வந்து நகரைச்சூழ்ந்த. தூசிப்படை - முன்படை. இசை - புகழ். 'தார்தாங்கி வீழ்ந்தான்றலை...எய்துவனவற்றை எய்தியது' என்றமையின், இச்செய்யுள், தலைக்காஞ்சியாயிற்று. (௪௧)

## தலைமாராயம்:—

72. தலைகொடுவந்தா னுண்மலியச்
சிலையுடைவேந்தன், சிறப்பீந்தன்று.

இ - ள். தலை கொடு வந்தான் உள் மலிய - தலையைக்கொண்டுவந்தவன் மனம் உவக்கும்படி, சிலை உடை வேந்தன் - வில்லையுடையமன்னன், சிறப்பு ஈந்தன்று - செல்வத்தைக்கொடுத்தது. எ - று.

(கு - பு.) மாராயம் - சிறப்பு; முன்னர்க்கூறியதலையைக் கொண்டுவந்தவனுக்குச் செய்யும் சிறப்பு.

வ - று. உவன்றலை யென்னு முறழ்வின்றி யொன்னா
ரிவன்றலையென் றேத்த வியலு - மவன்றலை
தந்தாற்கு நல்கல் வியப்போ கிளர்ந்தேத்தி
வந்தார்க்கு வந்தீயும் வாழ்வு.

இ - ள். உவன் தலை என்னும் உறழ்வு இன்றி - உவன் இவனுக்குமேலென்றுசொல்லும் ஒப்பில்லாமல், ஒன்னார் - பகைவர், இவன் தலை என்று ஏத்த - இவன் எல்லாரினும் தலையானவனென்று சொல்லி வாழ்த்தும்படி, இயலும் அவன் தலை - நடக்கும் அவனுடையதலையை, தந்தாற்கு - கொண்டுவந்தவனுக்கு, கிளர்ந்து ஏத்தி வந்தார்க்கு - மிகப்புகழ்ந்துவந்தார்க்கு, உவந்து ஈயும் வாழ்வு நல்கல் - மகிழ்ந்துகொடுக்கும் செல்வத்தைக்கொடுத்தல், வியப்போ - அதிசயமோ. எ - று.

(கு - பு.) 'அவன்றலைதந்தானுக்கு வாழ்வை நல்கல் வியப்போ' என்றதனால், இது, தலைமாராயமாயிற்று. (௬௨)

## தலையொடுமுடிதல்:—

73. மண்டமருண் மாறாமைந்திற்
கொண்டான்றலையொடு கோல்வளைமுடிந்தன்று.

இ - ள். மண்டு அமருள் - மிக்கபூசலின்கண், மாறா மைந்தின் கொண்டான் தலையொடு - ஒழியாதவலியினையுடைய கைப்பிடித்தான் தலையுடனே, கோல் வளை முடிந்தன்று - திரண்டவளையினையுடையாள் இறந்தது.

வ - று. கொலையானாக் கூற்றங் கொடிதே கொழுநன்
றலையானா டையலாள் கண்டே - ............
முயங்கினாள் வாண்முகமுஞ் சேர்த்தினா ளாங்கே
யுயங்கினா ளோங்கிற் றுயிர்.

இ - ள். தையலாள்—, ஆனாள் - அமையாளாகி, கொழுநன தலை கண்டு - கணவனுடையதலையைப்பார்த்து, முயங்கினாள் - தழுவினாள், வாள் முகமும் சேர்த்தினாள் - ஒளிசிறந்த வதனத்தையும் கூட்டினாள், ஆங்கே உயங்கினாள் - அவ்விடத்தே வருந்தினாள், உயிர் ஓங்கிற்று - உயிர் மேலேசென்றது; (ஆதலால்) கொலை ஆனாக் கூற்றம் - கொலைத்தொழில் அமையாதகூற்றம், கொடிது—, எ - று.

(கு - பு.) 'தையலாள் கணவனது தலையைக்கண்டு உடன் இறந்தாள்' என்றுவந்தமையின், இது, தலையொடுமுடிதலாயிற்று. (௭௩)

## மறக்காஞ்சி:—

74. இலைப்பொலிதா ரிகல்வேந்தன்
மலைப்பொழிய மறங்கடைஇயின்று.

இ - ள். இலை பொலி தார் இகல் வேந்தன் - பச்சிலையாலே பொலிவு பெற்ற மாலையாற்சிறந்த வலியினையுடையமன்னன், மலைப்பு ஒழிய - பகைவருடைய மாறுபாடுநீங்க, மறம் கடைஇயின்று - மறத்தொழிலைச் செலுத்தியது. எ - று.

(கு - பு.) மறம் - வீரம். 'மறங்கடாயின்று' என்றும் பாடம்.

வ - று. கருந்தலையும் வெண்ணிணமுஞ் செந்தடியு மீராப்
பருந்தோ டெருவை படர - வருந்திறல்
வேறாய மன்னர் வியப்பக் கடாயினான்
மாறா மறவன் மறம்.

இ - ள். மாறா மறவன் - நீங்காதகொடுவினையாளன், கரு தலையும் - கருமையாகிய தலையையும், வெள் நிணமும்-வெண்மையாகிய நிணத்தையும், செம் தடியும் - செம்மையாகிய தசையையும், ஈரா - இழுத்துக்கொண்டு, பருந்தோடு எருவை படர - பருந்தும் கழுகும் செல்லவும், அரு திறல் - அரிய வெற்றியினையுடைய, வேறு ஆய மன்னர் வியப்ப - பகைவர் அதிசயிப்பவும், மறம் கடாயினான் - மறத்தொழிலைச் செலுத்தினான். எ - று.

(கு - பு.) 'மறவன் மறத்தொழிலைப் பகைமையையுடைய மன்னர் வியப்பச் செலுத்தினான்' என்றதனால், இது, மறக்காஞ்சியாயிற்று. (௭௪)

## இதுவுமது:—

75. மண்செழு மறவன் மாறுநிலை நோனான்
புண்கிழித்து முடியினு மத்துறை யாகும்.

இ - ள். மண் செழு மறவன் - ஒப்பனையாற்பொலிந்த மறத்தொழிலையுடையவீரன், மாறு நிலை நோனான் - பகைவருடைய மாறுபாட்டுக்குப் பொறானாகி, புண் கிழித்து முடியினும் - பகைவர்வேல்பட்ட தன்மார்பிற்புண்ணைப் பிளந்துமரிப்பினும், அ துறையாகும் - முற்பட்ட துறையாகும். எ-று.

(கு - பு.) ஒப்பனை - அலங்காரம். மரித்தல் - இறத்தல்.

வ - று. நகையமர ராய நடுங்க நடுங்கான்
றொகையமர் ரோட்டிய துப்பிற் - பகைவர்மு
னுங்கிச் சினவுத னோக்கு னுதிவேலாற்
பொங்கிப் பரிந்திட்டான் புண்.

இ - ள். நகை அமர் ஆயம் நடுங்க - மகிழ்ச்சிமேவும் தன்கூட்டங் குலைபவும், நடுங்கான் - தான் குலையானாகி, தொகை அமர் ஓட்டிய துப்பின் பகைவர் - செறிவையுடைய போரைத்தூரந்த வலியினையுடைய மாற்றார், முன் - தன் முன்னெல்லையைப், நுங்கி சினவுதல் நோனன் - கைக்கொண்டு கோபித்தலைப் பொறானாகி, பொங்கி - வெகுண்டு, வேல்நுதியால் - வேற்படையின் நுதியாலே, புண் பரிந்திட்டான் - புண்ணை அறுத்தான். எ - று.

(கு - பு.) 'வேலாலே தன்புண்ணை அறுத்துக்கொண்டான்' என்றதனால், இதுவும், மறக்காஞ்சியாயிற்று. (கடு)

## பேய் நிலை:—

76. செருவேலோன் றிறநோக்கிப்
பிரிவின்றிப் பேயோம்பின்று.

இ - ள். செரு வேலோன் திறம் நோக்கி - போரைச்செய்யும் வேலினையுடையானது திறப்பாட்டைப்பார்த்து, பிரிவு இன்றி பேய் ஓம்பின்று-நீங்குதலொழிந்து பேய் பாதுகாத்தது. எ - று.

(கு - பு.) பேய்நிலை - பேயின் தன்மை.

வ - று. ஆயு மடுதிறலாற் கன்பிலா ரில்போலுந்
தோயுங் கதழ்குருதி தோள்புடைப்பப் - பேயுங்
களம்புகலச் சீறிக் கதிர்வேல்வாய் வீழ்ந்தா
னுளம்புகல வோம்ப லுறும்.

இ - ள். களம் புகல - பூசற்களத்துள்ளார் விரும்ப, சீறி கதிர் வேல் வாய் வீழ்ந்தான் - கோபித்து ஒளியையுடைய வேலின்வாயிலே விழுந்த வீரனது, உளம் புகல - மனமகிழும்படி, பேயும் - பேய்தானும், தோயும் கதழ் குருதி தோள் புடைப்ப - நிலமெல்லாம்நனையும் விரைந்தசோரி தோளிலே அலைக்கும்படி, ஓம்பல் உறும் - பாதுகாத்தலைச் செய்யாநின்றது; (ஆதலால்) ஆயும் அடு திறலாற்கு - பலரும் கொண்டாடும் வலியினையுடையானுக்கு, அன்பு இலார் இல்போலும் - அன்பில்லாதவர்கள் இல்லைப்போலும். ()

(கு - பு.) 'வேல்வாய் வீழ்ந்தானுடைய உள்ளம் மகிழும்படி பேயும் ஓம்பலுறும்' என்றதனால், இது, பேய்நிலையாயிற்று. (கசு)

## பேய்க்காஞ்சி:—

77. பிணம்பிறங்கிய களத்துவீழ்ந்தாற்
கணங்காற்ற வச்சுறீஇயன்று.

இ - ள். பிணம் பிறங்கிய களத்து வீழ்ந்தாற்கு - பிணமிக்க போர்க்களத்திலே பட்டானுக்கு, அணங்கு ஆற்ற அச்சுறீஇயன்று - பேய் மிகவும் அச்சமுறுத்தியது. எ - று.

வ - று. கொட்டுஞ் சிமிருங் குறுகுங் குடர்சூடிப்
பெட்ப நகும்பெயரும் பேய்மக - ளுட்கப்
புனலங் குருதிப் புலால்வாய்க் கிடந்து
கனல விழிப்பவற் கண்டு.

இ - ள். அம் குருதி புனல் - அழகிய உதிரமாகியநீரில், புலால் வாய் கிடந்து, புலாலிடத்தேகிடந்து, கனல விழிப்பவன் கண்டு - பார்வைஅழல நோக்கும்வீரனைப்பார்த்து, பேய்மகள் - பேய்ப்பெண், உட்க - அவன் அஞ்சும்படி, கொட்டும் - சுழலும், நிமிரும் - நீளும், குறுகும்—,குடர் சூடி-குடர் மாலையைச்சூடி, பெட்ப நகும் - தன் உள்ளம்விரும்பும்படி சிரிக்கும், பெயரும் - போம். எ - று.

(கு - பு.) போர்க்களத்திற் புண்பட்டுவீழ்ந்தானைப் பாதுகாத்தற்கு ஒருவரும் இல்லாமையின், அவனருகேவந்து பேய்பாதுகாப்பதாகக் கூறுந்துறை பேய்க்காஞ்சி யெனப்படுமென்பர் நச்சினார்க்கினியர். 'உதிரநீரிற் புலாலிடத்தேகிடந்து விழிப்பவனைக்கண்டு பேய்ப்பெண் சுழலுதல் முதலியவற்றைச் செய்யும்' என்றதனால், இது, பேய்க்காஞ்சியாயிற்று. (௭௭)

## தொட்டகாஞ்சி:—

78. வியன்மனை விடலை புண்காப்பத்
............பேழ்வாய்ப் பேய்தொட் டன்று.

இ - ள். பெரியவாயினையுடையபேய்மகள் போர்க்களத்தில் தலைமகனைப் பாதுகாத்தற்கு அவனுடையபுண்ணைத் தீண்டியது. எ - று.

(கு - பு.) தொட்ட - பேய்தொட்ட. 'பேய்' என்பது, அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது.

வ - று. கொன்றுருத்த கூர்வே லவற்குறுகிக் கூரிருள்வாய்
நின்றுருத்து நோக்கி நெருப்புமிழாச் - சென்றொருத்தி
யொட்டார் படையிடந்த வாறாப்பு ணேந்தகலந்
தொட்டாள் பெருகத் துயில்.

இ - ள். கூர் இருள்வாய் - மிக்கஇருளின்கண்ணே, ஒருத்தி - ஒருபேய்மகள், சென்று - போய், கொன்று உருத்த கூர் வேலவன் குறுகி - கொலைத்தொழிலைச்செய்து வெகுண்ட கூரியவேலையுடையவனைக்கிட்டி, நின்று உருத்து நோக்கி - நின்று கோபித்துப்பார்த்து, நெருப்பு உமிழா - அழலைக்கான்று, ஒட்டார் படை இடந்த - பகைவருடைய ஆயுதம்பிளந்த, ஆறா புண் ஏந்து அகலம் - தீராத புண்ணைத்தாங்கின மார்பினை, துயில் பெருக தொட்டாள் - உறக்கம்மிகும்படி தீண்டினாள். எ - று.

உறக்கமிகுதல் - உயிர்போதல்.

(கு - பு.) மரணத்திற்கு நெடுந்துயிலென்று ஒருபெயருண்டு. 'கூரிய வேலினைக் குறுகி அவனுடைய ஆருயிர்ப் புண்மார்பைப் பேய்மகள் தீண்டினாள்' என்றமையின், இது, தொட்டகாஞ்சியாயிற்று (௧௮)

## தொடாக்காஞ்சி:—

79. அடலஞ்சா நெடுந்தகைபுண்
தொடலஞ்சித் துடித்துநீங்கின்று.

இ - ள். அடல் அஞ்சா நெடு தகை புண் - கொலையையஞ்சாத பெரிய நிலைமையையுடையவனது புண்ணினை, தொடல் அஞ்சி - தீண்டுதற்குப்பயந்து, துடித்து நீங்கின்று - (பேய்) நடுங்கிப்பெயர்ந்தது. எ - று.

(கு - பு.) தொடாத - பேய்தொடாத.

வ - று. ஐயவி சிந்தி நறைபுகைத் தாய்மலர் தூய்க்
கொய்யாக் குறிஞ்சி பலபாடி - மொய்யிணர்ப்
பூப்பெய் தெரிய னெடுந்தகைபுண் யாங்காப்பப்
பேய்ப்பெண் பெயரும் வரும்.

இ - ள். மொய் இணர் - செறிந்தகொத்தினையுடைய, பூ பெய் தெரியல் - மலரால் தொடுத்த மாலையால்நிறைந்த, நெடு தகை புண் - பெரியமேம்பாட்டையுடையவனது புண்ணை, யாம்—, ஐயவி சிந்தி - வெண்சிறுகடுகினைத் தூவி, நறை புகைத்து - குங்குலியமுதலான நறுநாற்றத்தைப் புகைத்து, ஆய் மலர் தூய் - தெரிந்தபூவினைச்சிதறி, கொய்யா குறிஞ்சி பலபாடி - பறியாத குறிஞ்சிப்பண் பலவற்றையும்பாடிக்கொண்டு, காப்ப - காத்தலைச் செய்ய, பேய்ப்பெண் - பேய்மகள், பெயரும் - நீங்கும், வரும் - அணுகும். எ - று.

" கொய்யாக்குறிஞ்சி, பண்ணுக்கு வெளிப்படை.

(கு - பு.) சிறுகடுகை நெருப்பிலேதூவிப் புகைப்பின், பேய் அணுகாதென்பர்; இதனை, 'கடிப்பகை' என்னும் அக்கடுகின்பெயராலுமுணர்க; கடி - பேய். இச்செய்யுள், வீரனைப்பாதுகாக்கும் மகளிர் கூற்று. 'யாம் ஐயவிதூவுதல் முதலியவற்றைச்செய்து பாதுகாத்தலாற், பேய்ப்பெண் பெயரும் வரும்' என்று வந்தமையின், இது, தொடாக்காஞ்சியாயிற்று. (௧௯)

## மன்னைக்காஞ்சி :—

80. வியலிடமருள விண்படர்ந்தோ
னியல்பேத்தி யழிபிரங்கின்று.

இ - ள். வியல் இடம் மருள - அகன்ற பூமியிலுள்ளார் மயங்கும்படி, விண் படர்ந்தோன் - வீரசுவர்க்கத்தே சென்றவனது, இயல்பு ஏத்தி - பண்பினைப் புகழ்ந்து, அழிபு இரங்கின்று - நொந்து வருந்தியது. எ - று.

(கு - பு.) கழிவுபொருட்கண் வரும் மன்னென்னும் இடைச்சொல்லை அடுத்து வருதலின், இத்துறை, மன்னைக்காஞ்சியெனப்பட்டது; மன்னென்

பது மன்னையெனத்திரிந்து நின்றது. இத்துறை மன்னென்பதை அடுத்தும் அடாமலும் வரும்; பின்னுள்ள வெண்பாவும் "சிறியகட் பெறினே" (புறநானூறு, உ௩௫) என்னும் செய்யுளும் முன்னையதற்கும், "பாரோர்க் கீத்த" (ஷை. உ௨௧) என்னும் செய்யுள் பின்னையதற்கும் உதாரணங்களெனக்கொள்க.

வ - று. பேரார்க்குப் புணைமன் புரையோர்க்குத் தாணுமன்
னூர்க்கு முலகிற்கு மோருயிர்மன் - யார்க்கு
மறந்திறந்த வாயி லடைத்ததா லண்ண
னிறந்திறந்த நீளிலை வேல்.

இ - ள். அண்ணல் - தலைவனானவன், பேரார்க்கு புணைமன் - பூசலுக்குத் தெப்பம் அனையவன்; இப்பொழுது அது கழிந்தது! புரையோர்க்கு தாணு மன் - உயர்ந்தோர்க்குத் தாணுவை ஒப்பானவன்; இப்பொழுது அது நீங்கிற்று! ஊர்க்கும் உலகிற்கும் ஓர் உயிர் மன் - தன் பதிக்கும் பூமிக்கும் ஒரு யிரையனையவன்; இப்பொழுது அது நீங்கிற்று! நிறம் திறந்த - அவனுடைய மார்பைவெளிசெய்த, நீள் இலை வேல் - நீண்ட இலைத்தொழிலாற்சிறந்த வேலானது, யார்க்கும்—,அறம் திறந்த வாயில் அடைத்தது - தருமம் தோன்றின வாயிலை அடைத்தது. எ - று.

(கு - பு.) இஃது, ஒருவீரன் போரில் இறந்தபொழுது கண்டோர் சொல்லியது. அவன் மார்பைத்திறந்தவேல் அறந்திறந்த வாயிலை அடைத்ததென்க. இச்செய்யுளில், மன் அடுத்துவந்ததுகாண்க. (௨௦)

## கட்காஞ்சி :—

81. நறமலியு நறுந்தாரோன்
மறமைந்தர்க்கு மட்டீந்தன்று.

இ - ள். நற மலியும் நறு தாரோன் - மதுமிகுந்த மணத்தையுடைய மாலையினையுடையோன், மறம் மைந்தர்க்கு - தறுகண்மையையுடைய வீரர்களுக்கு, மட்டு ஈந்தன்று - மதுவைக்கொடுத்தது. எ - று.

(கு - பு.) கள் காஞ்சி - தலைவன் வீரர்களுக்குக் கள்ளைக் கொடுப்பதாகிய காஞ்சித்துறை; கள் - இங்கே வீரபானம்.

வ - று. ஒன்னு முனையோர்க் கொழிக வினித்துயின்
மன்னன் மறவர் மகிழ்தூங்கா - முன்னே
படலைக் குரம்பைப் பழங்கண் முதியாள்
விடலைக்கு வெங்கள் விடும்.

இ - ள். மன்னன் மறவர் - வேந்தனுடைய வீரர், மகிழ் தூங்கா முன்னே - மதுவையுண்டு களித்தாடுவதற்கு முன்னே, படலை குரம்பை - தழைக்கற்றையால் வேய்ந்த குடிலிடத்துள்ள, பழங்கண் முதியாள் - புன்கண்மையையுடையகிழவி, விடலைக்கு வெம் கள் விடும் - தான் பெற்றவீரனுக்கு

வெவ்வி தானமதுவை விடாநின்றாள்; (ஆதலால்) ஒன்றீ முனையோர்க்கு - பொருந்தாத பகையரசர்க்கு, இனி துயில் ஒழிக - இனி உறக்கம் ஒழிவதாக. எ - று.

(கு - பு.) 'மன்னன்மறவர் மகிழ்தூங்காமுன்னே' என்றதனால், வீரர் கள்ளுண்டு களித்தல் பெறப்பட்டது. இது கண்டோர்கூற்று. குடில் - குடிசை. புன்கண்மை - துன்பம். (உக)

## ஆஞ்சிக்காஞ்சி :—

82. காதற் கணவனொடு கனையெரி மூழ்கு
மாதர்மெல் லியலின் மலிபுரைத் தன்று.

இ - ள். காதல் கணவனொடு - அன்பினையுடைய தன்கொழுநனோடு, கனை எரி மூழ்கும் - செறிந்த நெருப்பிலே அழுந்தும், மாதர் மெல் இயலின் - காதலையுடைய மெத்தென்ற தன்மையாற் சிறந்தவள்தன், மலிபு உரைத்தன்று - மிகுதியைச்சொல்லியது. எ - று.

(கு - பு.) ஆஞ்சிக்காஞ்சியென்பதற்கு அஞ்சின காஞ்சியென்றுபொருள்கூறுவர்; அச்சம், தலைவி கணவனுடன் எரிபுகுமையிற் கண்டோர்க்கு உண்டாவதெனக்கொள்க.

வ - று. தாங்கிய கேளொடு தானு மெரிபுகப்
பூங்குழை யாயம் புலர்கென்னு - நீங்கா
விலாழிப் பரித்தானை வெந்திறலார் சீறூர்ப்
புலாழித் தலைக்கொண்ட புண்.

இ - ள். நீங்கா விலாழி பரி தானை - ஒழியாத வாய்நுரையினையுடைய குதிரையாற்சிறந்த சேனைகளையுடைய, வெம் திறலார் சிறு ஊர் - வெவ்வியதிறலையுடைய பகைவரது சீறூரிடத்து, புல ஆழி தலைக்கொண்ட புண் - புலால் நாற்றத்தினையுடைய சக்கரத்தாலே எறியப்பட்ட புண்ணை, தாங்கிய கேளொடு - தரித்தகணவனோடு, தானும் எரி புக - தானும்நெருப்பிலேபுகவேண்டி, பூ குழை - பொலிந்தமகரக்குழையினையுடையவள், ஆயம் புலர்க என்னும் - தோழிமாரை அகலப்போமினென்றுசொல்லுவாள். எ - று.

புண்ணைத்தாங்கிய கேளொடு எனக்கூட்டுக.

'புல' என்பதனுள், அகரம்தொக்கது; ஒற்று இரட்டாமையுமறிக.

(கு - பு.) 'எரிபுகீஇ' என்றும்பாடம். இச்செய்யுளில், ஒருத்தி தன்கணவனோடு தீப்புகுதற்கு நின்றமைகாண்க. (உஉ)

## இதுவுமது :—

83. மன்னுயிர் நீத்த வேலின் மனையோ
ளின்னுயிர் நீப்பினு மத்துறை யாகும்.

இ - ள். மனையோள் - மனைக்கிழத்தியானவள், மன் உயிர் நீத்த வேலின் - தலைவனுடைய உயிரைநீக்கினவேலாலே, இன் உயிர் நீப்பினும் -

(தன்னுடைய) இனிய ஆவியை ஒழிப்பினும், அ துறையாகும் - முன்சொன்ன துறையேயாம்.

வ - று. கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோ - னவ்வேலே
யம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று.

இ - ள். விறல் வெய்யோன் - வெற்றியைவிரும்பினோன், வெம் வேல் வாய் வீழ்ந்தான் - வெய்தான வேலின்வாயிலே பட்டான், அ வேலே - அந்தவேற்படையே, அம்பின் பிறழும் தட கண் - அம்பைப்போலவே மிளிருகின்ற பெரியகண்களையுடையளான, அவன் காதல் கொம்பிற்கும் - அவன் அன்பினையுடைய வஞ்சிக்கொம்புபோல்பவளுக்கும், கூற்று ஆயிற்று—;(ஆதலால்) கற்புடைமை - ஒருமைப்புடைமையானது, கௌவை நீர் வேலி - ஆரவாரத்தால்மிக்க கடல்சூழ்ந்த நிலத்தில், கடிதேகாண் - கொடிதேகாண். எ - று.

(கு - பு.) 'கணவனைக்கொன்றவேலே அவன் மனைவிக்கும் கூற்றாயிற்று' என்றமையின், இச்செய்யுளும் ஆஞ்சிக்காஞ்சியாயிற்று. (௨௩)

மகட்பாற்காஞ்சி:—

84. ஏந்திழையாட் டருகென்னும்
வேந்தனொடு வேறுநின்றன்று.

இ - ள். ஏந்து இழையாள் தருக என்னும் - உயர்ந்த ஆபரணத்தினையுடையாளை எனக்குத் தருகவென்றுசொல்லும், வேந்தனொடு வேறுநின்றன்று - அரசனோடு மாறுபட்டுநின்றது. எ - று.

(கு - பு.) மகள் பால் காஞ்சி - ஒருவீரன் தன்மகளை மணஞ்செய்யவிரும்பிய அரசனோடு பகைத்தமைகூறுவது. கலம்பகத்திற்குரிய துறைகளுள் ஒன்றாகிய 'மறம்' என்பது இதன்பாற்படும்.

வ - று. அளிய கழல்வேந்த ரம்மா வரிவை
யெளியளென் றெள்ளி யுரைப்பிற் - குளியாவோ
பண்போற் கிளவிப் பல்வளையாள் வாண்முகத்த
கண்போற் பகழி கடிது.

இ - ள். அளிய கழல் வேந்தர் - அளியினையுடைய கழல்மன்னர், அம்மா அரிவை எளியளென்று - அழகிய திருமகளைப்பனையமடவாள் தாம்கொள்கைக்கு எளியளென்று, எள்ளி உரைப்பின் - இகழ்ந்துபேசுவார்களாயின், பண் போல் கிளவி - பண்ணையொத்த வார்த்தையினையுடைய, இ பல்வளையாள் - இந்தப் பலதொடியினையுடையவளது, வாள் முகத்த - ஒளிபொருந்தி

யமுகத்தின்கணுள்ளனவாகிய, கண் போல் பகழி - கண்ணினைப்போலும் அம்புகள், கடிது குளியாவோ - விரைவாகத்தையாவோ. எ - று.

(கு - பு.) தைக்குமென்றபடி. 'என் மகளை வேந்தர் தாம்கொள்ளுதற்கு எளியளென்பாராயின், அவளுடைய கண்போன்ற எம் பாணங்கள் அவர்கள்மீது தையாவோ' என்றதனால், இது மகட்பாற்காஞ்சியாயிற்று. (உச)

## மூனைகடிமுன்னிருப்பு:—

85. மன்னர்யாரையு மறங்காற்றி
முன்னிருந்த மூனைகடிந்தன்று.

இ - ள். மன்னர் யாரையும் - வேந்தரெல்லாரையும், மறம் காற்றி - சினத்தைக் காலப்பண்ணி, முன் இருந்த மூனை கடிந்தன்று - முன்னேயிருந்த போர்க்களத்தினின்றும் அவரைப் போக்கியது. எ - று.

(கு - பு.) முன் இருப்பு மூனை கடி - முன்னே இருத்தலையுடைய போர்க்களத்தினின்றும் பகைவரை நீக்குதல்; கடி - முதனிலைத்தொழிற்பெயர்.

வ - று. கடிகமழ் வேரிக் கடைதோறுஞ் செல்லக்
கொடிமலி கொல்களி றேவித் - துடிமகிழ
வார்த்திட் டமரு ளடையாரை யம்மூனையிற்
போர்த்திட்டான் பெய்கழலி னான்.

இ - ள். பெய் கழலினான் - இட்ட வீரக்கழலினையுடையான், கடி கமழ் வேரி - மிகநாறுகின்ற மதுவினையுடைய, கடைதோறும் செல்ல - (மாற்றாரணத்தின்) வாயிலிடந்தோறும் போகும்படி, கொடி மலி - வெற்றிக்கொடியால்மிக்க, கொல் களிறு ஏவி - கொல்லுகின்றகளிறுகளை ஏவி, துடி மகிழ ஆர்த்திட்டு - துடிகொட்ட ஆரவாரித்து, அமருள் - போருள்ளே, அடையாரை - பகைவரை, அ மூனையில் போர்த்திட்டான் - அந்தச் செருப்புலத்தினின்றும் போகத் துரந்தான். எ - று.

(கு - பு.) 'கழலினான் களிற்றை ஏவி ஆர்த்திட்டுப் பகைவரை அம்மூனையிற் போர்த்திட்டான்' என்றதனால், இது, மூனைகடிமுன்னிருப்பாயிற்று. ()

காஞ்சித்திணைப்பாட்டு ஒன்றும், துறைப்பாட்டு இருபத்துநான்கும் முடிந்தன.

(கு - பு.) காஞ்சித்திணைப்பாட்டு, "அருவரை பாய்ந்திறுதும்" என்பது. துறைப்பாட்டு இருபத்துநான்கு, "மன்மேல்வருமென" என்பது முதலியன.

நான்காவது

காஞ்சிப்படலம் முற்றிற்று.

# பிரகடனபத்திரம்.



| | விலை. | | V. P. P |
|---|---|---|---|
| | ரூபா. | அணா. | அணா. |
| சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், விசேடக்குறிப்புடன். | ௧ | ௮ | |
| சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லாருரையும் அரும்பதவுரை முதலியனவும். | ௫ | ௮ | ௦ |
| மணிமேகலையும் அரும்பதவுரை முதலியனவும். | ௫ | 0 | ௭ |
| பத்துப்பாட்டு நச்சினார்க்கினியருரை. | ௩ | 0 | ௬ |
| புறப்பொருள்வெண்பாமாலை மூலமும் உரையும். | ௧ | ௮ | ௩ |
| எட்டுத்தொகையுள், | | | |
| ௩-வதாகிய ஐங்குறுநூறும் பழையவுரை முதலியனவும். | ௧ | ௮ | ௯ |
| ௪-வதாகிய பதிற்றுப்பத்தும் பழையவுரை முதலியனவும். | ௧ | ௮ | ௯ |
| ௮-வதாகிய புறநானூறு மூலமும் உரைமுதலியனவும். | ௩ | 0 | ௬ |
| திரிசிரபுரம் மஹாவித்வான், | | | |
| ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்களியற்றியவை : | | | |
| சீகாழிக்கோவையும் அரும்பதவுரை முதலியனவும். | 0 | ௮ | ௨ |
| வீரவனப்புராணமும் அரும்பதவுரை முதலியனவும். | 0 | ௧௨ | ௯ |
| சூரைமாநகர்ப்புராணமும் அரும்பதவுரை முதலியனவும். | 0 | ௮ | ௯ |
| தொட்டிக்கலைச்சுப்பிரமணியமுனிவரியற்றிய | | | |
| திருவாவடுதுறைக்கோவையும் அரும்பதவுரை முதலியனவும். | 0 | ௮ | ௨ |
| சேறைக்கவிராஜபிள்ளை யியற்றிய | | | |
| திருக்காளத்திநாதருலாவும் அரும்பதவுரை முதலியனவும். | 0 | ௬ | ௨ |
| திருப்பூவணம்கந்தசாமிப்புலவரியற்றிய | | | |
| திருப்பூவணநாதருலாவும் அரும்பதவுரை முதலியனவும். | 0 | ௪ | ௨ |
| மணிமேகலைப்பதிப்பைச்சார்ந்தவை. | | | |
| புத்தசரித்திரம், பௌத்ததருமம், பௌத்தசங்கம். | 0 | ௧௨ | ௨ |
| மணிமேகலைக்கதைச்சுருக்கம். | 0 | ௮ | ௨ |
| திருவாவடுதுறைக் கச்சியப்பமுனிவரியற்றிய | | | |
| கச்சியானந்தருத்திரேசர் வண்டுவிடுதூது. | 0 | ௨ | |
| திருமயிலைத்திரிபந்தாதி. | 0 | ௧ | |

இப்புஸ்தகங்களைச் சென்னைத் தம்புசெட்டிவீதி, 173 நெ. ரிப்பன் புஸ்தகசாலையிலும், சென்னை, ஜீ. ஏ. நடேசன் அண்டு கம்பெனியிலும், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடத்திலும், திருச்சிராப்பள்ளி, எஸ். பி. ஜி. காலேஜ், தமிழ்ப்பண்டிதர், வெ. சதாசிவ செட்டியாரவர்களிடத்தும், மதுரைப் புதுமண்டபம் புஸ்தகக்கடை மு. கறுப்பண்ணபிள்ளையிடத்தும், ஷை புதுமண்டபம் புஸ்தகக்கடை இ. ரா. ம. குருசாமிக்கோனாரிடத்தும், என்னிடத்தும் மேற்குறித்த விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

இங்ஙனம் :

வே. சாமிநாதையன்,

*Tamil Pandit,*

*Presidency College, Madras.*